# தெய்வப் பாடல்கள்





அமுத நிலையம்

கி. வா. ஜகந்நாதன்

# தெய்வப் பாடல்கள்

(நாடோடிப் பாடல்கள்)

தொகுத்தவர் :
கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம் லிமிடெட்
46, இராயப்பேட்டை ஹைரோடு,
சென்னை-600 014.

# முன்னுரை

**தெய்**வங்களைப் பற்றிய பாடல்கள் இந்தத் தொகுதியில் உள்ளன. விநாயகர் முதலிய கடவுளர்களின் புகழை இவற்றில் காணலாம். இடையிடையே வழக்குச் சொற்கள் வருகின்றன. அவற்றை மாற்றாமல், பழமையைப் பாது காக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் அப்படியே தந்திருக்கிறேன்.

செந்தமிழ்ச் சொற்கள் வழக்கு மொழியில் எவ்வெவ் வாறு திரிந்து வழங்குகின்றன என்று ஆராய்ச்சி செய்ய இந்த வழக்கு மொழிகள் உதவும்.

நாடோடிப் பாடல்கள் ஆனாலும் பல அருமையான கருத்துக்கள் இடையிடையே விரவி வருகின்றன. இந்தப் பாடல்கள் தமிழ்நாடு முழுவதும் பரவியிருக்கின்றன. அப்படிப் பரவும்போது பல பாட பேதங்கள் உண்டாகி விடுகின்றன. அத்தகைய பாட பேதங்களையும் கொடுத் திருக்கிறேன்.

சீரிய புலவர்கள் இயற்றிய இலக்கியங்கள் செந்தமிழ் மொழியில் விளங்குகின்றன. இந்த நாடோடிப் பாடல் களோ உயிரோட்டமுள்ள பாமரமக்கள் வாய்மொழியாகச் சொல்ல, எங்கும் பரவுகின்றன. என் வெளியூர்ப் பயணங் களில் 45 ஆண்டுகளாக இவற்றையெல்லாம் தொகுத் தேன். பெரும்பாலும் பெண்களே இவற்றைப் பாடுகிறார் கள். அவர்களிடம், பாடு என்றால் பாட மாட்டார்கள். ஆனால், நாம் பாடத் தொடங்கினால் அவர்கள் நாணத்தை

விட்டுப் பாடுவார்கள். இந்தத் தந்திரத்தை மேற்கொண்டு அவர்களின் வாயிலிருந்து பாடல்களை வருவித்தேன்.

காட்டில் பூத்த மலர்களைப் போலவும், மலையிலிருந்து விழும் அருவியைப் போலவும் இவை உள்ளன. இதற்கு முன் நாடோடிப் பாடல்களைப் பற்றிய கட்டுரைகள் பலவற்றைப் புத்தக உருவத்தில் வெளியிட்டிருக்கிறேன். முருகன் திருவருளால் இப்போது மூலப் பாடல்களையே வெளியிடும் வாய்ப்புக் கிடைத்தது. இந்த வரிசையில் இன்னும் சில புத்தகங்கள் வெளிவரும்.

'காந்தமலை'
சென்னை-28
25—9—83

அன்பன்
கி. வா. ஜகந்நாதன்.

# பொருளடக்கம்

———

# தெய்வங்கள்

## பிள்ளையார் தந்த பிள்ளை

கதை கதையாம் காரணமாம்;
காரணத்தில்ஓர் தோரணமாம்;
தோரணத்திலே பச்சைப்புல்லாம்;
பச்சைப் புல்லைப் பசுமாட்டுக்குப் போட்டேன்;
பசுமாடு பால் தந்தது;
பாலைப் பாப்பானுக்குக் குடுத்தேன்;
பாப்பான் ஒரு காசு தந்தான்;
காசைக் கடைக்காரனுக்குக் குடுத்தேன்;
கடைக்காரன் ஒரு தேங்காய் தந்தான்;
தேங்காயைப் பிள்ளையாருக்குக் குடுத்தேன்;
பிள்ளையார் பிள்ளை தந்தார்.
அந்தப் பிள்ளை எங்கே?
இதோ இந்தப் பிள்ளை, இந்தச் செல்லப் பிள்ளை!

# பிள்ளையாரை வேண்டுதல்

குட்டிக்கொண்டு தண்டனிட்டேன்;
    சேவிக்கிறேன் நான் உமக்குக்
குத்தங்குறை உள்ள தெல்லாம்
    அத்தனையும் போக்கி வச்சுத்
தொப்பைக் கணபதியே,
    வந்து பணிந்தேன் நான்;
தொந்தி விநாயகரே,
    தொழுது பணிந்தேன் நான்;
ஆத்தங்கரை ஓரத்திலே
    அரச மரத்தடியில்
குயிலும் படிக்குமேற்கே
    துயிலும் படித்துறையில்
சொகுசாக வீற்றிருக்கும்
    தந்தி முகவோனே,
நேரமுகாய் வீற்றிருக்கும்
    ஆனை முகவோனே,
வந்தபேரை வரவழைச்சு
    மனச்சித்தம் தான்இரங்கிச்
சிந்தித்த காரியங்கள்
    செயமாக ஆனக்கால்
வடையும் அதிரசமும்
    வடைப்பருப்பும் மனோகரமும்
இளநீரும் செங்கரும்பும்
    எள்ளுருண்டை மோதகமும்

காரா மணிப்பொரியும்
கடலைமணிச் சுண்டலும்
நெற்பொரியும் பானகமும்
நாகப்பழத் துடன்கூடக்
கொண்டுவந்து நான்கொடுப்பேன்;
குறையைத் தீர்த்தக்கால்;
வேணபடி நான்கொடுப்பேன்
மகானு பாவருக்கு;
கஷ்டகாலம் போக்கிவச்சுக்
காரியத்தை ஜயமாக்கிச்
சொஸ்தமாக்கி வச்சீரானல்
சுகிர்தம் மிகஉண்டு;
பண்டம்போல் பண்டம் சேர்த்துப்
பழையகுடி யானும்இட்டு
எப்போதும் போலே நானும்
என்னிக் கிருந்தாலும்
சாகாத சந்தானம்
சம்பத்துமேல் பால்பசுவும்
ஜடுதியில் தந்தீர் ஆனல்
தங்கக் கிண றுகட்டிச்
சிட்டாணியும் மேலேபோட்டு
செம்மையாய் அலங்கரித்துக்
சுக்ரவாரம் தட்டாமல்
தேங்காய் உடைப்பேன்நான்;
மாசம்ஒரு சுக்ரவாரம்
மறவாமல் யான் உமக்குப்
பட்சண வகைகளெல்லாம்
பண்ணித் தருவேனே;

பாசக் கயிற்றைப் கட்டிப்
பல்லேக் கடிச்சுக் கொண்டு
[இடையூறுகள் வந்து]
இம்சிக்கும் வேளையிலே,
தண்டைக் கால்அழகிய
விசாலாட்சி புத்திரரே,
வல்வினையும் போக்கிவச்சுப்
பாவங்கள் நீக்கிவச்சுத்
தும்பிக்கையி ஞலேஎன்னேச்
சொர்க்கத்தில் சேரும்ஸ்வாமி,
சொர்க்கத்தில் சேரும் ஸ்வாமி.
[தோத்திரம்நான் செய்திடுவேன்.]

# அவர் எங்கேயோ பிள்ளையார்

(தனுர் மாதத்தில் பாடுவது)

பிள்ளையார் பிள்ளையார், அவர் எங்கெங்கே பிள்ளையார்?
கத்திரித் தோட்டத்திலே களைகொத்தரூர் பிள்ளையார்;
அங்கேயும் போய்ப்பார்த்தேன், அவர்எங்கேயோ
பிள்ளையார்?

பாப்பாரத் தெருவிலே பந்தாடரூர் பிள்ளையார்;
அங்கேயும் போய்ப்பார்த்தேன அவர் எங்கேயோ
பிள்ளையார்?

செட்டித் தெருவிலே செண்டாடரூர் பிள்ளையார்;
அங்கேயும் போய்ப் பார்த்தேன் அவர் எங்கேயோ
பிள்ளையார்?

வேளாளத் தெருவிலே விளையாடரூர் பிள்ளையார்;
அங்கேயும் போய்ப் பார்த்தேன் அவர் எங்கேயோ
பிள்ளையார்?

கோமுட்டித் தெருவிலே கொண்டாடரூர் பிள்ளையார்;
அங்கேயும் போய்ப் பார்த்தேன் அவர் எங்கேயோ
பிள்ளையார்?

வாணியத் தெருவிலே வாதடரூர் பிள்ளையார்,
அங்கேயும் போய்ப் பார்த்தேன் அவர் எங்கேயோ
பிள்ளையார்?

## பிள்ளையார்

பிள்ளையார் பிள்ளையார் பெருமாளே பிள்ளையார்;
ஏன்தானே அழைக்கிரூர் ஏழைப் பெருமாளை;
கத்தரித் தோட்டத்திலே களைவெட்டரூர் பிள்ளையார்;
வெள்ளரித் தோட்டத்திலே விளையாடரூர் பிள்ளையார்;

## ஆண்டியின் கோலம்

1. மேலில்*வெண்ணீ றுல்நிறைந்து
காலில் பாதக்குறடணிந்து
வேல்கரம் பிடித்துவரார் பாரடி - உமை
பாலகரைப் போற்றிக்கொண் டாடடி.

2. தந்தைக்கு உபதேசிக்கக்
கொண்ட ஆண்டிக் கோலமதை
எந்தவிதம் கண்டுகளிப் போமடி?

3. பொன்உருவே போல்விளங்கும்
பொன்கமல முகஜோதி
மண்விண்வரை வீசும்ஒளி பாரடி - கந்தன்
மலரடி தன்னில்பணி வாயடி.

4. கங்கைபால் சர்க்கரை மச்சச்
சர்ப்பக்கா வடிஎடுத்துத்
தொண்டர்வரும் விந்தைதனைப் பாரடி - அந்தத்
தண்டாயுதன் பாதம்பணி வோமடி.

5. கானமயில் வாகனண்டி,
கார்த்திகை குமாரனடி,
தானவர்க்குக் காலனுய்வந் தானடி,—தேவ
சேனுபதி என்றுபேர் பெற்ருன டி.

6. இந்தக்கலி காலத்திலே
கந்த னேகண் கண்ட தெய்வம்;
அன்றிவேறு தெய்வம் இல்லை அன்னமே, - உமை
பாலகரைப் போற்றியே கொண் டாடடி.

### எல்லாம் பொன்

அச்சியும் குச்சியும் பொன்னுலே;
ஆவாரங் குச்சியும் பொன்னுலே;
பால் குடிக்கிற பழனி யாண்டவர்க்குப்
பாதக் குறடும் பொன்னுலே.

---

(பா-ம்.)* மேனி.

# கந்தன் பாட்டு

இடிச்சு இடிச்சுக் கந்தா மழைபொழியக்—கந்தா, கந்தா,
இடும்பன்குளம் கந்தா, தண்ணிவரக்—கந்தா, கந்தா,
தண்ணிவந்த கந்தா, தாரையிலே—கந்தா, கந்தா, ரெண்டு
கன்னிவந்தால் கந்தா, ஆகாதோ,—கந்தா, கந்தா,
அஞ்சடா கந்தா, உன்வயசு—கந்தா, கந்தா,
அறியாத கந்தா, சிறுவயசு—கந்தா, கந்தா
கொஞ்சமடா, கந்தா, உன்பாரம்—கந்தா, கந்தா,
குழந்தைவடி, கந்தா, வேலவனே,—கந்தா, கந்தா,
ஊசி, கந்தா, படர்ந்தமலை—கந்தா, கந்தா,
உத்ராட்சம், கந்தா, காய்க்கும்மலை—கந்தா, கந்தா,
பாசி, கந்தா, படர்ந்தமலை—கந்தா, கந்தா,
பழனிமலை, கந்தா, வேலவனே,—கந்தா, கந்தா,
கிண்ணத்தில், கந்தா, சந்தனமாம்—கந்தா, கந்தா,
கிளிமூக்கு, கந்தா, வெத்தலையாம்—கந்தா, கந்தா,
அள்ளி அள்ளி, கந்தா, தானமிட—கந்தா, கந்தா,
ஆறுமுகா, கந்தா, வாராதென்ன?—கந்தா, கந்தா!

## குருபரன் கண்ணி

(திருச்செந்தூருக்குச் சென்ற ஒரு பக்தர் அங்கே பூஜை முதலியன முறைப்படி நடவாமை கண்டு தோத்திரம் பண்ணுபவரைப் போலப் பாடியது.)

கொட்டைகட்டி மானேஜர்
    செங்கடுவாய் வந்தபின்பு
சுத்தவட்டை ஆனதென்ன?
    சொல்லாய் குருபரனே!
வேலவர்க்கு முன்நிற்கும்
    வீரவாகு தேவருக்குச்

சாயரட்சைப் புட்டுத்
தவிடோ குருபரனே!
மாநிலத்தில் காய்கிழங்கு
வத்தலுண்டு செந்தூரில்—ரெண்டு
ஆனைவத்தல் ஆனதென்ன?
ஐயா குருபரனே!

## திருத்தணி முருகனை வேண்டுதல்

1. பாவட்டஞ் சோலைக்குள்ளே—நீலமயில்
வாய்விட்டுக் கூவுதையா—அதைப்
புடிச்சுத் தாருங்காணும்;—திருத்தணி
மலையில் வேலவனே!

2. எட்டடிக் குச்சுக்குள்ளே—முருகா
எத்தனைநாள் இருப்பேன்?—ஒரு
மச்சுவீடு கட்டித்தாரும்—திருத்தணி
மலையில் வேலவனே!

3. நேத்துக் குடுத்த பணம்—முருகா
நெல்லுக்குச் செல்லவில்லை;—அதை
மாத்தித் தாருங்காணும்—திருத்தணி
மலையில் வேலவனே!

4. கல்லு மலைமேலே—கவுதாரி
மெள்ள நடக்குதையா;—அதைப்
புடிச்சுத் தாருங்காணும்—திருத்தணி
மலையில் வேலவனே!

## பழனி ஆறுமுகன்

அதோ போராண்டி, பழனி. ஆறுமுகத்தாண்டி;
அவனாலே என்ன சுகம்? போனால் போராண்டி—முருகன்
தானே வாராண்டி.
தேனும்தினை மாவைத் தின்னு நின்னாண்டி; –அவன்
சிங்கார வேலுதன்னை எடுத்து நின்னாண்டி.

## புஷ்பம் சாத்தலாம்

ஒரு மரக்கால் இரும்பளந்து ஓரடித் தோட்டம் கரும்பு
நட்டுக்
கரும்பும்இல்லை; கணுவும் இல்லை; கரணைத்தோட்டம்
மரணமில்லை;
ஒருகடையாம், பல சரக்காம், சந்நிதியாம், சதுரானை,
கோபுரத்து வேல்முருகா, என்னபுஷ்பம் சாத்தலாம்?
மல்லிகைப்பூ, மருக்கொழுந்து, மலர்ந்த புஷ்பம்
சாத்தலாம்.

# வரும் அழகு

(பல்லவி)

வரும்அழ கென்ன சொல்லுவேன்!
மங்கைசிவ காமவல்லி மைந்தருக்கு வேல்எடுத்துத்
தரும்அழ கென்ன சொல்லுவேன்!

(அநுபல்லவி)

அருமையாக வேபிறந்த ஆறுமுக வேலவர்க்குப்
பெருமையுட னேகொடுத்த பிடித்த வேலும் கையும்
[வரும்]

(சரணங்கள்)

1. தாசியர்கள் ஆடிவரவே—இருபுறம்வெண்
சாமரங்கள் வீசிவரவே,
பூசியே புனுகு வீசவே—பொன்மார்தனிலே
பூமாலை கள்அசையவே,
தாசராய்ப் பணிந்தபேர்க்குச்
சகலபாக்கி யம்கொடுக்கும்
சண்முக வடிவேலரும்
உன்னதக் கையில்வேலும் [வரும்]

2. தங்கச் சலங்கைதொங்கலும்—இடைதனிலே
தரித்தபீ தாம்பரங்களும்
மங்களக் கோலமாக மதிமுகத் திலகமும்
சிங்கார வேலவனார் சங்கரிதன் பாலகனார் [வரும்]

3. கண்டமரர் கள்வணங்கக்—கந்தர் வடிவைக்
கண்டுரம்பை யர்மயங்க
நின்றரிய வேதம் முழங்க—திரு
நீறுதனைக் கொண்டாடி யாரும் முழங்க
வண்டார் கருங்குழலாள் வள்ளி தெய்வயானையுடன்
அண்டம்அளந் தோர்மருகன் சென்று வேலும்
கைப்பிடித்து [வரும்]

# வள்ளி கல்யாணம்

**வெ**ள்ளித் தேருமுண்டு; திருநாளுண்டு;
தேருக்கு வந்த ஜனங்கள் உண்டு—வள்ளி
கெழவரென்று சொல்லாதடி; கெட்ட கோபம் நேருமடி;
பாட்ட னென்று சொல்லாதடி; பைம்புருஷன்
நானேதாண்டி;
பத்து வயசுப் பாலகனே, பெத்த தாயை நான்மறந்தேன்;
ஆனைபோலத் தேகமெல்லாம் பூனைபோலக் குங்குதே—
வள்ளி
பூனைபோலக் குங்குதடி; உள்ள லும்பு நோகுதடி.
மோட்டு முள்ளிலே நான்நடந்து
முழங்கா லெல்லாம் நோகுதடி;
காட்டு முள்ளிலே நான்நடந்து
காலும் கையும் ரத்தமடி;—மயில்
வாகனத்தில் வந்தேன் வள்ளி—சிவ
சுப்பிரமணியன் நான்தாண்டி.
வேல்முருகன் நான்தாண்டி
உன்னைத் தொட்டுப் பொண்ணே, வள்ளி
உலகத்தையே நான்மறந்தேன்;
அடிச்சாமெத்த அடிபொறுப்பேன்;
அண்டையிலே தங்கியிருப்பேன்;
குத்தினால் குத்தேற்பேன்;*
கூடமாடத் தங்கியிருப்பேன்.

---

(பா-ம்.)* குத்துரைப்பேன்.

# விளையாட வாரேன்

## பலிஞ்சடுகுடு

வெள்ளிப் பிரம்பெடுத்து மெள்ளச் சுத்திவிட்டு,
வீதிவலம் வந்தே விளையாட வாரேண்டா;
வாரேண்டா, வாரேண்டா, வாரேண்டா
தங்கப் பிரம்பெடுத்துச் சிங்காரமாய் வீசிக்கிட்டுத்
தாலிகட்ட வாரேண்டா, வாரேண்டா ...

## வேலவர் பாட்டு

ஏருத மலைதனிலே-கந்தா-எருதுரெண்டும் தத்தளிக்கப்
பாராமல் கைகொடுப்பார் பழனிமலை வேலவர்;
ஏழுகடல் தாண்டிநான் எடுத்துவந்தேன் தாமரைப்பூ;
வாடாமல் சாத்துங்கடி, வடமதுரை வேலவர்க்கு.

### வள்ளி மணாளன்

1. வாசமலர் சூடும்வள்ளி மங்கை மணாளா,
தோகைமயில் ஏறிவந்து தொண்டர்களை ஆளாய்.
2. இந்தநந்த வனத்திலே தென்றல் வீசுதே;
அழகாக மயில்சிறகை விரித்து ஆடுதே.
3. சுந்தரமாய்க் குயில்கள் கூவி ராகம் பாடுதே.
[சொகுசாகப் பறவையெலாம் ஒலித்து நாடுதே.]
4. குன்றந்தனில் வாழ்குமரா, குக்குடத்வஜா,
குவலயத்தில் சுப்ரமண்யா, கூறினேன் ஈசா!

# விடை கேட்டல்

நின்னஇடம் முருகையா, கங்கைதானே?
ஏலேச்சான், ஏலேச்சான்
போனஇடம் முருகையா, கங்கைதானே
ஏலேச்சான், ஏலேச்சான்
நிலவல்ல வாநீ போகுமதும்?
பொழுதல்லவா போகுறதும்?
போகட்டா என் தாயாரே,
மாதாவின் மனம் அறிய*
பாட்டுக்குப் பாட்டறிவேன்;
எதிர்ப்பாட்டு நான் அறிவேன்
பழம்பாட்டுப் பாடாவிட்டால்
புதுப்பாட்டு நான்அறிவேன்
எதிர்ப்பாட்டுப் பாடாவிட்டால்
இழுத்துப்போட்டு அடிக்கப் போறேன்.

## வேலவன் ஒயில் கும்மி

சந்தனம் சவ்வாது கமழும் சண்முகவடி வேலனே,
நின்றுடும் காவடிகள், நீண்டஇரு சேவடிகள்,
நிறக்கும் சந்நிதி சிறக்கும் தென்மொழி பிறக்கவந்துதி
(சந்தனம்)

எத்தினமும் உனேமறவேன் ஏழைக்கருள் குமரனே,
எத்திசையும் புகழ்பெற்றோனே, எட்டுக்குடி வேலனே,
கொட்டு முழக்கத்துடன் கோடானு கோடி
தட்டு வரிசைகள் தாளம்ரு தங்கமும் (சந்தனம்)
பத்தியுடன் உனேத்துதித்தேன் பரமக்குடி வேலவனே,
கத்திக்கத்தி நான்படிச்சேன்; கண்ணிரக்கம் இல்லையா?
ஆருதாரத்துக்குள்ளே அப்பாலுக் கப்பாலே
அடியும் நுனியும் தெரிந்து சொல்லுவாய். (சந்தனம்)

---

(பா-ம்)* மனம் எரிய:

# அம்பலவாணன்

(பல்லவி)

அடியார்க் கருள்புரியும் ஐயனே, அநேகனே!

(அநுபல்லவி)

சிந்தைதனில் வந்து தோன்றுமே
சொந்தமுடன் பஜித்தவர்க்கு (அடி)

(சரணங்கள்)

1. பாரமான சம்சாரத்தில் நான்பட்ட துயரங்கள்
போதுமே;
பார்க்கஎன்றே ஆசை கொண்டேன்; பாலகிருஷ்ணன்*
பணியும் பாதம் (அடி)

2. ஏற்கை யாய்ச்சிவகாமி யுடன்வந்து,
ஆர்க்கும்அரிதான அம்பல வாணனே,
தீர்க்கவேணும் என்னுடைய ஜென்மப் பிணியதனை
(அடி)

3. முந்திச்செய்த தொந்தவினையை மூளஎன்றால்
ஆமோ?
சிந்தை இரங்கும் ஸ்ரீகரனே, குஞ்சித பாதா. (அடி)

4. நெஞ்சிலே நினைத்த போதிலும் பஞ்ச பாதகம் மிஞ்சி
வெளிப்படும்;
தஞ்சம் என்றுநான் வந்து பணிந்தேன்;
த்யாகஸ்ரீ சிதம்பர ராஜனே! (அடி)

---

* கோபாலகிருஷ்ண பாரதியார் பாடல் போலும்.

# அறிவார் ஆர்?

## (தியாகராஜர் பெருமை)

### (பல்லவி)

அறிவார் ஆர் உன் மகிமை,
ஆரூர்வின் ருடிய பெருமையை?

### (சரணங்கள்)

1. அறிய வேணுமென்று அநுதி னம்நினைத்து
அங்கம் முழுவதும் பொங்கிச் சிலிர்த்துத்
தெரியவே எனதுநா அச்சம் தீர்த்துத்
தித்திக்கத் தித்திக்கச் சிவநாமத்தை ஜபித்து (அறி)

2. கருவி கரணங்களும் கலந்துநின் றுருகக்
கண்ணினில் ஆனந்த வெள்ளங்கள் பெருக
மறுபடி ஜனியாத மார்க்கங்கள் தருக
மாலும் அயனும் தேடித்தினம் வருக (அறி)

3. முப்புரம் எரித்திட்ட முகமந்த ஹாஸா,
முத்தி அளித்திடும் பக்தப்ர காசா,
அப்பர்சுந் தரர்தங்கட் கருள்புரி ஈசா,
ஆரூர் அமர்ந்தருளும் தியாகாதி ராஜா! (அறி)

# நீசவேடச் சிறப்பு

(பல்லவி)

ஆச்சரிய மான சேவை ஆசை என்ன என் ஐயனே!

(அநுபல்லவி)

வாச்ச மங்கை சிரத்தின் மீதில்
மதுக்குடம்தரித் ததைக்கண்டு சொன்னேன் (ஆச்)

(சரணங்கள்)

1. அத்திமுகனும் வேலவனும் அருமையால் கறுத்ததும்
நெற்றிக் கண்ணோ டொத்தமேனி நீசர்போல்பூ
ரித்ததும்
முக்தி அளிக்கும் ஹஸ்தத்தினல் பற்றித் தப்பெடுத்
தடித்ததும்
வக்ஷஸ்தலத்தில் செத்தகன்று
விளங்கவே உள்ளம் களித்ததும் சொன்னேன். (ஆச்)

2. மாலும்அயனும் தேடிக்காணு மலரடியால் நடந்ததும்
சூலபாணி யான நாதன் துண்டு சங்கிலி அணிந்ததும்
கோல மறைகள் ஸ்வான மாகக் கூடப்பின்னே
தொடர்ந்ததும்
ஆலால சுந்தரர் உம்மைத் துதித்ததும்மதுக்
குடித்தோர்போல ஆனீர் (ஆச்)

யோகியான அந்தணர்முன் தேகிஎன்று சென்றதும்
வேகமாக யாகத் தில்அவிர் பாகம்வாங்க நின்றதும்
ஆகமாதி வேதமெல்லாம் ஏகம்ஏகம் என்றதும்
ஊகித் தோர்கள் உள்ளம் மேவும் தியாகியான
தயையினல் சொன்னேன். (ஆச்)

# ஆரூர் ஐயன் ஆட்டம்

(பல்லவி)

ஆடினார் ஆரூர் ஐயன்—மனமகிழ்ந்தே
ஆடினார் ஆரூர் ஐயன்.

(அநுபல்லவி)

அன்பர் இருதயத்தில் வாசன்
செம்பொன் அம்பலா காசன். (ஆடினார்)

(சரணங்கள்)

1. தேடித் தினம்பணியும் ஆடக க்ஷேத்ரந்தனில்
தேவர்களும்துதிக்கத் திவ்ய சபையதனில்
நாடி வசனித்தோர்கள் நாத முடிவதனில்
நாராயணன் ஸ்ரீஹரி நாபிக் கமலந்தனில்
(ஆடினார்)

2. சங்கமத் தளதாள வாத்யச மேதராக
எங்கும் நிறைந்தஈசர் ஏக ஸ்வரூபமாகப்
பொங்கி மகிழ்ந்தோர்உள்ளம் பூர்ணப்ர காசமாகப்
பொற்பணி அணிந்தபாதர் நிர்க்குண
ஸ்வரூபமாக (ஆடினார்)

3. சுத்தப்ர காசதிவ்ய ஜோதி திகழ்ஜொலிக்க
நித்திய மாகநினைந் துருகும் மனம்களிக்க
பற்றிப் படிக்கும்ஜன்ம பாசபந் தம்ஒழிக்கப்
பங்கஜப் பிரகாசசுக சங்கரி சமேதராக (ஆடினார்)

4. அண்டபா தாளமும் கிடுகிடென் றதிரத்
தொண்ட ரிடத்திலுள்ள தோஷங்கள் உதிரக்
கண்டுதரி சித்தவர் காதலித் துக்கதறக்
கர்த்தரா கியசபேசர் நிர்த்தனப் பிரியத்யாகேசர்
(ஆடினார்)

# ஏசறவு

(பல்லவி)

திருவாரூர் தேடி வருவேனோ நான்?
தேவனைக் கண்டு தெளிவேனோ நான்?

(அநுபல்லவி)

மருவும் மனசு மணியா சனத்தில்என்
மன்னனைக் கண்டு மகிழ்வே னோநான்?

(சரணங்கள்)

1. வையக வாழ்க்கையை மறக்கேனோ நான்?
வழிகொள்ளும் மாயையைத் தடுக்கேனோ நான்?
நெஞ்சுக் கதவைநெம்பித் திறக்கேனோ நான்?
நேசமாய் நிமலனோ டிருக்கேனோ நான்?

2. அஞ்சி அடியார் தூளி அணிவேனோ நான்?
அம்பலத் தைநம்பி இருக்கேனோ நான்?
சஞ்சித கர்மத்தை மாய்ப்பேனோ நான்?
சாட்சியும் நீஎன்று இருப்பேனோ நான்?

3. பாசக் கடலைத்தள்ளிக் கடப்பேனோ நான்?
படுகுழி கூபத்தில் கிடப்பேனோ நான்?
ஆசைகொள் ளும்மனசைத் தடுப்பேனோ நான்?
ஐயன் த்யாகராஜன்கை பிடிப்பேனோ நான்? (திரு)

## கைலாசம்

ஈசர் வாழும் கைலாச வாசலிது பொண்ணே,
ஓகோ பொண்ணே, நீதான் என்னே?
ஏது கார்யம் சொல்லப் போறுய்? இயம்புவாய்என்
முன்னே.
சற்றே பொண்ணே, ஓகோ பொண்ணே!
ராஜர்வாழும் மதுரை ராஜ்யம் போலவே ஆனநந்தி,
ஓகோ நந்தி, இந்த
ரஜதகிரி மீளவிடா ராகமுட னேவந்தேன்.
நந்தி ஓகோ நந்தி.

———

# சங்கரர் ஏசல்

1, சங்கரரை ஏசிப் பாடுங்கடி பொண்காள்,
சந்ததி சம்பத்துண் டாகுமடி;
மங்கள மாகவே சங்கரரை ஏசி
வணங்கிச் சோபனம் பாடுங்கடி பொண்காள்,
வணங்கிச் சோபனம் பாடுங்கடி.

2. கட்டுக்கட் டாகவே மற்றப்பொன் மாளிகை
இஷ்டமுடனே பலஇருக்கக்
கொட்டாய் அடிச்ச மசான மதிலே
குடியாய் இருப்பதைப் பாருங்கடி,—சிவன்
குடியாய் இருப்பதைப் பாருங்கடி.

3. வேறுவே ருயப்பல மாதிரி தன்னிலே
விஸ்தாரச் சோமன் பலஇருக்க
நாறும் புலித்தோலே நாணம்கூ டாமலே
நாடித் தரிச்சதைப் பாருங்கடி,—சிவன்
நாடித் தரிச்சதைப் பாருங்கடி.

4. வாசனே குறையாத மல்லிகை செண்பகம்
மட்டற்ற புஷ்பம் பலஇருக்க
வேடிக்கை யாகவே வில்வமும் தும்பையும்
வேண்டி அணிந்ததைப் பாருங்கடி,—சிவன்
வேண்டி அணிந்ததைப் பாருங்கடி.

5. செம்பொன்னும் ரத்னமும் கூடிச் சமைந்ததோர்
சிங்கார மான நகைஇருக்கக்
கம்பி ஓலேயும் கட்டணியும் பாம்பும்
கனிவாய் அணிந்ததைப் பாருங்கடி,—சிவன்
கனிவாய் அணிந்ததைப் பாருங்கடி.

6. ஜாதிகொள் எண்ணெய்த் தயிலம் குழம்புகள்
சந்தன எண்ணெய் பலஇருக்க
ஜோதி முடியை ஜடையாயத் தரிச்சவர்
திரிகிற நேர்த்தியைப் பாருங்கடி;– சிவன்
திரிகிற நேர்த்தியைப் பாருங்கடி.

7. பூசு புனுகுபன் னீருஜவ் வாதுடன்
வாசனைத் தூளும் பலஇருக்க
வேடிக்கை யாகவே வெண்சாம்ப லைப்பூசி
வருகிற நேர்த்தியைப் பாருங்கடி;—சிவன்
வருகிற நேர்த்தியைப் பாருங்கடி.

8. ஊர்வசி மேனகை ரம்பை திலோத்தமை
உத்தம ஸ்த்ரீகள் பலர்இருக்கப்
பர்வத புத்ரியாம் பார்வதிதன்னைப்
பாரியாய்க் கொண்டதைப் பாருங்கடி;—சிவன்
பாரியாய்க் கொண்டதைப் பாருங்கடி.

9. ஓடும் குதிரைகள் சிங்கம் முதலான
உல்லாசமான ரதம்இருக்க
மாட்டின்மேல் ஏறியே மானம்கூ டாமலே
வருகிற நேர்த்தியைப் பாருங்கடி,—சிவன்
வருகிற நேர்த்தியைப் பாருங்கடி.

10. இப்படியே சொல்லிப் பாடுங்கடி—பெண்கள்
இஷ்டசம் பத்துண் டாகுமடி.

———

# சிவத்தியானம்

திங்கள் அணிந்த முடியும் சடையும்
தேடிய பிரமாவும் காணுத் திருமுடியும்
நீறிட்ட நெற்றியும் நீண்ட புருவமும்
நிமிஷத்தில் மன்மதனை எதிர்த்ததோர் நெற்றியில்
கண்ணழகும் நீண்டு உருண்டு கூர்மையாகி
யோகியர் உள்குமணி நாசியழகும்
கடைகழன்ற மேல்முழியும் கபோல நயனமும்
பூரண சந்திரன் போல முகமும்
தாமரை போலக் கபோலமும்
ஆணிமுத் துப்போலத் தந்தமும்
தாழம்பூ இதழ்போலே அதரமும்
கனக மணிக்குண் டலம்இலங்கக்
கர்ண வஜ்ரம் வைடூர்யம் மரகதம்
பச்சை இழைத்ததோர் மகுடமும்
அந்தமாய் விளங்கும் முகதேஜஸ் காந்தியாலும்
சிருஷ்டி ஸ்திதிஸம் ஹாரம் பண்ணும் செய்கையாலும்
இன்னும் கம்பீரப் பார்வையாலும்
கண்டேன் நான் என்னிடத்தே
ஆதி யந்தமற்ற சங்கரரை;
கண்டவுடனே சிவனைக் கருதியே ஜகம்மறந்தேன்;
அண்டியதோர் ஆனந்தத்தில் அடிபணிந்தேன்;
இன்மயமான சதாசிவரைப் பூஜை பண்ணி எங்கும்
தன்மய மென்னும் ததாகாரம் ஆகிவிட்டேன்;
சிவலோகம், சிவலோகம்.
தரிச்சதொரு காலகூடம் சங்குவரிக் கழுத்திலே
நவரத்ன பூஷணம்
விளங்கும் திருமார்பில் ஆனைத் துதிக்கைபோல்
உருண்டு திரண்ட ஆஜாநு பாகுவும்

அபயஸ் தப்பண்ணும் கமலத் திருக்கரமும்
கங்கணம், கைவளை, கரும்ப ணுதிகளும்
கனகாபரண பூஷண ராகி விளங்கும்
தங்கப் பிரதிமைபோல் ஸ்படிகத்து மேனியனும்
சதகோடி சூரியன்போல் ஜ்வலிக்கும்முக காந்தியனும்
வெண்முத்து மாலையும் விளங்கும் திருமார்பில்
விபூதி ருத்ராக்ஷம் வஸ்த்ரயக் ஞோபவீதம் கண்டேன்.

ஜகமுழுதும் பூஜித்துச் சேவித்துய்ந்து கரையேறிச்
சிவலிங்கத் தலைக்கட்டுக் கட்டு நேர்த்தியனை
நவரத்ன பூஷணமும் வடகாதுத் தொங்கலும்
அரைவடம் கிங்கிணி அரைநூல் அரசிலையும்
மதாளிபூத்த வாழையது போல்துடையழகும்
மலர்ந்தசெந் தாமரை போலே ஜானுவும்
காளியுடன் வாதுகுறி நோவாமல் நடனம் பண்ணிய
கழற்காலும்

சங்கையில் அழகுதிருப் பாத அடியும்
எண்டிசை பதினாறு வீரசிலம் பழகும் கண்டேன்;
அர்த்தநா ரீசுவரரே, அம்பிகை மனோகரரே,
பராசக்திக்குத் தேகம் பாதி கொடுத்தவரே,
சக்தியை விட்டு க்ஷணம்பிரி யாதவரே,
ப்ரக்ருதி புருஷரே, ப்ரபஞ்சசிருஷ்டி காரணரே,
ப்ரபஞ்சத்தை உண்டாக்கித் தானே ப்ரமிச்சு
இருக்கிறபோது செப்பிடு வித்தை என்றோ
ஸ்வயம் பிராந்தி ஏவி வைத்த
கல்பித மாயை என்றோ கண்கட்டு.வித்தைதன்னை
உடுக்கும் ப்ரளயத்தை அடக்கிப் புசித்தவரைக்
கண்டேன்.

பாதாள நாபிக்கீழ் பாதமல ராகியே
ஆகாசம் பரம்மாண்டம் அவயவங்கள் ஆகிய
சகல ச்ருதி வேதங்க ளாகித்
திருமுக மண்டல மாக விளங்கவே,
சந்திர சூரியர் அக்கினி நேத்திரம தாகவே,

ஸ்தாவர ஜங்கமம் ஸமஸ்தமான லோகமும்
சமுத்திரமும் கங்கையும் தம்மிடத்தே சூழவே,
சமஷ்டிவ்யஷ்டி ஆத்மகமாய் விராட்புருஷ னுய்
விளங்கும்
சந்த்ர சூர்யாதி சர்வசாக்ஷி யாயிருக்கும்
வ்யாக்ர சர்மாம் பரமான உரித்தோல்
பூட்டியே மயில்தோகை பூண்டு
நாகபூஷணம் சூலபாசம் கபாலதண்டம்,
மான்மழு அக்கினியும் பரசு அபயஹஸ்தமும்
ஆனைத் தோலும் கண்டா மணியும்
பத்துக் கரங்களிலும் பவிஷுடன் நேர்த்தியாய்ப்
பஞ்ச முகம்விளங்கும் பார்வதி நாதனுமாய்
வேதம் நாலும் வெள்ளைக் குதிரையாய் விளங்கவே,
ஸ்ரீபூமி தேவியும் தேராய் விளங்கவே,
திக்குகள் தோறும் அஞ்சுரூ பிணியாகி
ஸ்ரீருத்ரம் பஞ்சாக்ஷரம் ஓங்கார வண்டுகள் பூண்டு
கொள்ளவே,
நான்முக ரும்வந்து சாரத்யம் பண்ணவே,
தேவருடன் தவமுனியும் வனதேவியும் போற்றிநிற்கத்
துந்துபி முழங்கத் திரிபுரம் எரிக்கத்
துரையாக எமுதரும் மகாமேருவைத்
தனுஸாக வேவளைத்துச் சேஷனைக் கயிருக்கட்டிச்
சக்ரபாணியைப் பாணமாய்ச் சங்கித்த மாய்ப்பண்ணிச்
சற்றே நகைத்துத் திரிபுரம் எரித்ததோர்
அச்சுதரைக்கண்டேன் நான் என்னிடத்தே.

———

# சிவனுர் ஏசல்

1. ஈசுவரரும் உமையாளும் ஏகாச னத்திலே
வசித்துக் கொண்டிருந்தார்; அந்த வேளையில்
தேவி சிவரூபி சிவனைக் குறித்துப்
பரிகாசம் பண்ணின பார்வதி வாக்யத்தைக்
கேளுங்களேன் ஜீவர்களே,—முத்திதான்
கிட்டுமிப் போதே.

2. விசால விழிகளை மயக்கிச் சுழற்றி
மின்னொளி போலம்மன் கனிவாய் நகைத்து
ஆதிசிவன் முகத்தோடே முகம்வைத்து
அம்மன் துதிசொன்ன ஆனந்த வார்த்தையைக்
கேளுங்களேன் ஜீவர்களே!

3. போதுமை யாபிட்சை புகுந்தெனக் கிட்டது;
பிரம்ம கபாலத்தைப் போடுமிப் போகிறே;
மாதானம் வாங்க வழிசொல்லு றேன்சேதி;
வைத்திப்போ கேட்க மனசுமுண் டானல் (போ)

4. அச்சுதன் சொன்ன விசேஷம் எனக்கு;
அண்டத்தில் பாதி தருகிறோம் என்ருர்;—உங்கள்
முக்கண் ணர்க்குமன சுண்டோஇல் லையோஎன்று
வெட்ட வெளியாகக் கேட்டுவரச் சொன்னுர்;
கேட்கச் சொன்னுரெங்கள் கேசவர் அஞ்சி. (கே)

5. விஷ்ணு சகோதரி மீனுட்சி அம்மன்
விச்வமெல் லாம்கீர்த்தி யாக விளங்க
வித்தகன் தங்கை பர்த்தாபிக்ஷை கூறப்
பொருமல் எங்கண்ணன் தலைகுனிவாரே! (கே)

6. கொடுப்பேனோர் ஹஸ்தம்; கேட்கவும் வேண்டாம்;
கூடவந்துதன மாகச் சொரிவர்;
முழிச்சுமன் மதனைப் போலவே பார்த்தால்
மோசம்வந் தாலென்ன செய்வோம்என் றஞ்சிக்
(கேட்)

7. மகாதேவ ரோடே கௌரியைக் கூடச்
சுப்பிரமண்யர் அமரர் ப்ரம்மாவும்
ஈசனுக்குமன் மதனை அனுப்ப
அவனை எரித்த பயம்பிடித்ததே. (கேட்)

8. வீட்டுக்கு வீடுபோய் இரப்பானேன்?
ஆத்துக்கோர் அகப்பைஅன்னம் வாங்குவானேன்?
பாக்யலக்ஷ்மி எங்கள் மதனி
பார்த்தால் கடைக்கண்ணால் பாக்யமுண்டாமே.
(கேட்)

9. பட்டணம் எங்கும் சுற்றி அலைவானேன்?
பத்தினி மாரெல்லாம் பங்கம் கொள்வானேன்?
மைத்துனர் லக்ஷ்மி தேவிகை யில்பிட்சை
வாங்கினால் சொர்ணம் மாணிக்கம் உண்டாமே!
(கேட்)

10. க்ஷீர சமுத்திரம் தன்னில் பிறந்தவள்
ஸ்ரீஹரி யைப்பதி யாக அடைந்தவள்
ஆதி மஹாவிஷ்ணு மார்பிலே ஆனந்த
மச்சினி லக்ஷ்மி தேவி இருக்கையில் (கேட்)

11. பிச்சைக்குப் போவது உசிதம் இல்லைகாண்.
..............
அச்சுதன் மச்சினன் அரைக்கேணி விதைகேட்டால்
மிச்சமாய்ப் பயிரிட்டால்
சொஸ்தமாய்ப் புஜிக்கலாம். (கே)

12. விடஅராப் பூண்பதேன்? வேதியர் ஆவதேன்?
ஜடைகளை விரிப்பதேன்? தெருவில் இரப்பதேன்?
எடைதந்த மச்சினன் கடைக்கண்ணைக் காட்டினால்
முடிகலங் காணுமே; மோதி விளையுமே! (பி)

13. ஓரெண்ணப் பாதியோர் உண்டுமக்கு;
காலன் கடாவையும் கேட்டோட்டி வாரேன்.
ஒருசாலால் உழுது சம்பா விதைத்தால்
பாலோடு தயிரன்னம் பசியாமல் புஜிக்கலாம். (பி)

14. சூலம் மழுவென்ற ரெண்டை அழித்தால்
மேடுகள் பள்ளங்கள் வெட்டவே மண்வெட்டி
நாளையே பண்ணித் தருகிறோம் என்றார்;
வேலைகள் பார்க்க மனசும்உண் டானால். (பி)

15. மூத்த மச்சினன் வீட்டில் கலப்பை
சாத்தி இருக்கு; தரச்சொல்லிக் கேட்டால்
பார்த்து மெள்ள உழுகிறோம் என்று
மூத்த பிள்ளையைக் கேட்டுவரச் சொன்னார் (பி)

16. வேலைக்கு நீரிப்போ போகவும் வேண்டாம்;
கால பயிரவர் தம்மை அனுப்பும்;—அவர்
ஏர்விட்டு நன்றாய் உழுது விதைச்சால்
அவர் கைராசி கதிர்கலம் காணுமே. (பி)

17. கூட்டாளி உண்டே., குபேரர் உமக்கு;
நாட்டுக்கு விதையெல்லாம் நன்றாகக் கட்டினால்
நாட்டுக்கு நாயகர் தந்தஅக் காணி
போட்டு விதைத்தால் பொழியுமே சொர்ணமாய்.
(பி)

18. ஜடைதனில் நதியுண்டே; கேதாரம் பாயுமே;
மங்காமல் காயாமல் வாகாகப் பயிரிட்டால்
பொங்காமலேமழை போலப் பொழியும்;
தங்காமலேசொர்ண மாக விளையும். (பி)

# தியாகேசர் வைபவம்

(பல்லவி)

வாமபாக தேவியோடு மைந்தனை மடிமேல் வைத்த
மகானு பாவனே,
வானோர் புகழச் சித்தம் மகிழ்ந்த தேவனே!

(அநுபல்லவி)

பூமி புகழும் ஏற்றம் பொருந்திநின்ற ஆரூர்ப்
பூபதியாய் என்றும் ஸ்ரீபதி இதயத்தில் (வாம)

(சரணங்கள்)

1. பக்தி விரக்தியால் பலபேதங்க ளான
பரிபூர ஞானந்த பாக்கியங் கள்காணச்
சித்தத்துக் குள்ளே சிவபோதம் தானான
சின்மயா னந்தத் தெளிவு முடிவுதோண (வாம)

2. கரைஇல்லாத இன்பக் கரைஒன்றைக் காண்பிக்கக்
கருணை நிறைந்த கடாட்சத்தி னலன்றோ
அருமையாய் அமைத்த அநுக்ரகங் கள்செழிக்க
அந்தரங் கத்தில்அதி சுந்தரமாய்ச் சோபிக்க (வாம)

3. அபரிமி தானந்த போகத்தில் முழுக்காட்டி
அநுக்ரக நிக்ரக மானசக் தியைக்கூட்டி
விபவமா கும்இன்ப வெள்ளத்தில் நிலைநாட்டி
விடங்கத் தியாக ராஜனாய்
விளங்கும்பா தத்தைக்காட்டி (வாம)

## தியாகேசரைப் பணி

1. மனமே, நினையாய் அநுதினம் பணிந்து
மங்கை சங்கரி மனோகரனை.
நினைவில் ஒளியாய் நின்று விளங்கிய
நித்யசு கந்தபரி பூரணனை. (மனமே)

2. ஆதிரை நாள்கொண் டாடும் ஐயனை
ஆலம் உண்டமழுக் கையனை
ஜோதி யாகிஉள்ள தோற்ற மாகியே
தொண்டர்கள் கண்டிடும் மெய்யனை (மனமே)

3. பாவித்தோர் உள்ளம் பதித்திட வேஇரு
பாதம் உள்ளஎன் பண்டிதனைக்
காமி தார்த்தபல விஷயங்கள் காணக்
காட்சி தரும்கரு ணாகரனை (மனமே)

4. எங்கும் நிறைந்து புகழ்மலிந்திடும்
கங்கை எடுத்துத் தரித்தோனைத்
திங்கள் அணிந்து சிறந்து விளங்கிய
மங்கள ஸ்ரீதியாக ராஜனை (மனமே)

## தியாகராஜர் யாகசாலைக்கு எழுந்தருளல்

(பல்லவி)

ஆரூரில் தியாகராஜர் யாகசா லைக்குவந்த
அதிசயம் என்ன சொல்லுவேன்?

(அநுபல்லவி)

பார்க்கப் பதினாயிரம் கண்களும் வே ணுமே.
ஏற்கையாய் ஈச்வரியோடு சேர்க்கையாய் வந்த (ஆரு)

(சரணங்கள்)

1. கண்டோர் களும்மலேக்கச் சண்டாள வேஷம்கொண்டு
கள்ளுக் குடம்தலேயில் தூக்கிஅம் பாளும்நிற்கச்
சாமிசொன்ன ரூபமிது தானே இதுதான்என்று
சர்வக்ஞ மூர்த்தியை நேராய்க்கண் ணுல்கண்டு (ஆரூ)

2. நாலுவே தத்தைநாலு நாயாய்ப் பிடித்துக்கொண்டு
நடுவிலே செத்தகன்றைத் தோளில்தூக் கியேநின்று
தம்பட்ட மும்தப்பும் தம்கையி லேகொண்டு
தாபத் துடன்பூஜிக்கும் சோமயா ஜியைக்கண்டு (ஆரூ)

3. காளியோடே வாதாடும் காலால்நடந்து ஓடி
கனப்பிரி யத்துடன் சுந்தரர் சொன்ன பக்தரைத் தேடி
கையிலவிர் பாகம்வாங்க யாகசா லேயை நாடிக்
கந்தன் கணபதியுடன் தந்தனப் பாட்டுப் பாடி (ஆரூ)

4. ஆரூர்தன் னில்வசிக்கும் அருமை த்யாகராஜரை
அன்பர்களுக் கின்பந்தரும் கமலா லயவாசரைத்
தூதுளங் கீரையுண்ட தோழர்க்கு நேசரைத்
துன்பங்கள் தீர்த் தின்பந்தரும் கமலா லயவாசரை
(ஆரூ)

———

## தியாகராஜர் வருகை

(பல்லவி)

மங்களஸிம் மாஸ ஞதிபதி—மலை
மங்கைமனைக்கு வருகிறார்.

(சரணங்கள்)

1. செங்கை ம்ருதங்கம் ஒலிக்க
சங்கரி விரததவம் பலிக்க
அங்க நாயகியும் பூசிக்க
இங்கித மாய்க்கங்கை களிக்க (மங்கள)

2. காதில் குழையும் தோடும் அசையக்
கரியுரி புலியதளும் அசையச்
சாதுக்கள் போற்றும் சரணம் அசையத்
தாங்கு சேஷன் முடியும் அசைய (மங்கை)

3. பச்சைக்கற் பூரம் சுகந்தம் வீசப்
பரிமளத்திருச் சாந்தும் வீச
இச்சையாய்க் கிருஷ்ண கந்தம் வீச
ஈச்வரியுடன் மகிழ்ந்து பேச (மங்கை)

4. பாமரர் தம்மைக்காக்கும் நாதன்
பரவை வீட்டுக்கு நடந்த பாதன்
காம தகனம் செய்த வேதன்
காரண காரியவி நோதன் (மங்கள)

5. நிஜபோதம் பெற்ற ஹ்ருதயர் நேசன்
நித்தியகல் யாணஉல் லாசன்
அஜபா நடனம் செய்யும் ஈசன்
ஆண்டவன் தியாகாதி ராஜன். (மங்கள)

## தியாகாதி ராஜர்

(பல்லவி)

அரிஸ்வாஸ நடன தேவ
திருமேவிய சித்கன தீப!

(சரணங்கள்)

1. ஸனகாதி முனிதொழும் பாதா,
தினகர கோடி சுந்தர நாதா,
விநோத மானஸ விக்ரகா பவ நிக்ரகா!
கனரத்னஸிம் மாசனுதிச, காத்தி யாயனிப் பிராணேசா
(அரி)

2. சகலாகம ஸார, ஸர்வ மங்களகம் பீர
அகிலஜகத்துக் காரண பரி பூரண
அகண்டிதா னந்தஸ்வரூபா, ஆச்ரிதவத்ஸலப்ரதாபா!
(அரி)

3. ஆனந்தநடன சிதாகா சப்ரம் மானந்த ஸிந்துவத
னேசா,
தீனரட்சக தேகி கருண பாஹிமாம்
ஆனைஉரித்த திகம்ப ரேச, ஹம்ஸநடன த்யாகாதிராஜ!
(அரி)

# திருக்கரத்தின் வைபவம்

(பல்லவி)

பராபர னே,உன் றன் திருக்கரத்தி னுலென் றன்
பவம்விலக் கும்பரி பூரணனே!

(அநுபல்லவி)

சராசரங் களுக்கும் பொருளாகி அகில
சாட்சி யாகிய தயாளனே! (பராபர)

(சரணங்கள்)

1. எப்போதும் தவருத படிமழு ஏந்தி விளங்கிய
திருக்கரம்,
அப்பனே என்றுருகு வோர்தங்கள் அச்சம் தீர்க்கும்
திருக்கரம்,
சொப்பன ஜாலாவஸ்தை தரிசித்திடும் திருக்கரம்,
ஒப்பிலா உமைகைக் கமலத்தை உகந்து பிடித்த
திருக்கரம். (பரா)

2. அயன்அரி இந்திரன் முதலோர்க் கபயம் கொடுத்த
திருக்கரம்,
ஜயங்கொண்ட ஸனகாதிமுனிவர்க்குச் சின்முத்திரைத்
காட்டிய திருக்கரம்,
உயர்ந்தஅன்பர் கல்யாணத்தில் அடிமை யோலைகாண்
பித்தகரம்,
உம்பர் மனிதர் யாவருக்கும் உள்ளதைக் காட்டும்
திருக்கரம். (பரா)

3. மட்டி.ல் லாத மதங்கொண்ட கரியுரி
மகிழ்ந்து போர்த்திய திருக்கரம்,
பொட்டென வேவந்த பிரமன் சிரந்தன்னை
எட்டிக் கிள்ளிய திருக்கரம். (பரா)

4. இஷ்ட மான ஆள்போல்வந்தி பிட்டேந்திப் புஜித் திட்ட
கரம்,
சட்ட மாக ஆரூர் தன்னில்நின் று த்யாகம்
கொடுத் திட்டகரம். (பரா)

## தேர் ஓடுது

கல்லு மலைமேலே கல்லடுக்கிக்
காலாரக் கோயிலை உண்டுபண்ணி
மதுரைக் கோபும் தெரியக் கட்டி,
மருது வாறதைப் பாருங்கடி;
மருது வந்தாலும் தேரோடாது;
மச்சினன் வந்தாலும் தேர்ஓடாது;
தேருக் குடையாரு குப்புசா மிப்பிள்ளை
தேரோடுந் தோட்டத்திலே தேரோடுது.

———

# திவ்யரதாரூடன்

## (தியாகேசர் துதி)

(பல்லவி)

தேவியுடன்கூடிச் சிறந்து நடம்புரியும்
திவ்யரதா ரூடனே, சித்ரூபனே!

(சரணங்கள்)

1. மேவும் அடியார்க்கு விளங்கும்சர் வேசனே,
பாவிப்போர் ஹ்ருதயத்தில் பரமப்ர காசனே,
மூவு லகமும் குலுங்கி அதிர்ந்திட
முழங்கும் வாத்யாதி கோஷம் சிறந்திடத்
தேவ தேவர்கள் கண்டு மகிழ்ந்திடச்
சேர்ந்து பரிமள கந்தம் பொழிந்திட. (தேவி)

2. பாலநேத் திரந்தன்னில் காந்திப்ர காசிக்கப்
பாத நூபுரப் பிரபை சோபிக்க
மாலும் மனமகிழ்ந்து ம்ருதங்கம் வாசிக்க
மங்கைமுக கமலம் விகஸிக்க
நாலு முகவரும் ஜாலர் வாசிக்க
நங்கை சரஸ்வதி வீணை கோஷிக்க
சீல முனிவர்கள் கண்டு பூஜிக்கத்
திக்குப் பதிகள் பூமாரி வருஷிக்க. (தேவி)

3. வஞ்சகத் தைவிடுத்து வந்து பணிந்தோர்
மாயை தன்னைத் தடுத்துச்
செஞ்சடை யைவிரித்து முயலகனைச்
சேவடி யால்மி தித்து
பஞ்ச முகத்தாலும் கிருபை கொடுத்து
மிஞ்சின ஜனன வித்தினைக் கிரகித்து
அஞ்சிக்கிழ் நின்ற அடியார் முகம்பார்த்து
ஆரூர்தனில் வந்தென்னை ஆளவே உதித்து.
(தேவி)

# பணிவோர்க்கு மெய்யன்

## (தியாகேசர் பெருமை)

(பல்லவி)

அஞ்சிப் பணிவோர்க்கு மெய்யன்—எங்கள்
ஆரூர் அமர்ந்தமழுக் கையன்

(அநுபல்லவி)

வஞ்சி யுடன்மகிழ்ந்து கொஞ்சுவ தைஅறிந்து (அஞ்சி)

(சரணங்கள்)

1. ஐயஞ்சுக்கு மேற்பட்ட தீரன்;
அஜபா நடனம்செய் சூரன்;—நல்ல
உய்யும் ஞானவிவேக சாரன்;—மறை
ஓதும் குணங்களுக்குப் பாரன்;
ஐயம் விலக்கிளை ஆளும் அதிகம் பிரன். (அஞ்சி)

2. அல்லல் அறுக்கும்ஆதி மூலன்;—ஐயன்
அருமைத் துதிக்குஅநு கூலன்;—நல்ல
வெள்ளம் நிறைகரக்க பாலன்;
சடையில் மதிசூடுங்கங் காளன்;
செல்வம் பொருந்திய செங்கோலன் தயாளன்.
(அஞ்சி)

3. ஆசா பாசதுக்கவி நாசன்;—அஞ்சு
கோசங்களை அழிக்கும் ஈசன்;—நல்ல
வாச மலரில்விச் வாசன்;—மலை
மங்கை சங்கரிப்ரா ணேசன்;
தாசர் துதிக்கதிப்ர காசன், தியாகராஜன். (அஞ்சி)

# பிரயோசனம் என்ன?

## (இது பாபநாச முதலியார் கீர்த்தனம்)

(பல்லவி)

பேரும் நல்ல தியாகர், ஊர்செல்வத் திருவாரூர்,
பிரயோசனம் என்ன சொல்லுவேன்?

(அநுபல்லவி)

வாரிச் சொரிவீரென்று வார்த்தைமாத் திரம்ஸ்வாமி
வாராமல் ஒருபொல்லா தவனைவா சலில்வைத்தீர்.
(பேரும்)

(சரணங்கள்)

1. வாசல்நந் திக்குத்தப்பி வந்துதேகி என்றால்
வலதுகை அனல்ஏந்திச் சுடுமே ஸ்வாமி.
வீசும் அனலைத்தள்ளி வருவோம்என் றால்மனம்
வீரவெண் டயத்துக்கு மிகப்பயப் படுமே.
(பேரும்)

2. வீரவெண் டயத்துக்குள் ஆகிய ஆடரவின்
விஷத்தைச் சொரியுமது என்றே இருக்கிறீர்;
பேரை நம்பிவந்தோம் என்றுசொல் லப்போனால்
பித்தனென் றொருபேரை வைத்துக்கொண்
டிருக்கிறீர். (பேரும்)

3. பித்தரோ தியாகரே, பேசும்என் றால்பெரும்
பாபவி நாசரென்று அசைக்கிறீர் ஸ்வாமி.
எத்தனை சொன்னாலும் உம்மை விடேனென்றால்
இந்நாளென் றேநீற்றைத் தந்துபின் அசைக்கிறீர்.
(பேரும்)

## பெருமாளும் ஈசுவரரும

காதிலே போடுவது வாளி;
கழுத்திலே தொங்குவது தாலி;
கிராம தேவதை காளி;
பெருமாள் ஏறுவது யாளி.
பெருவயி றுனது தொந்தி;
பெருங்குரங் கானது மந்தி;
..........
ஈசுவரர் ஏறுவது நந்தி.

———

# ராஜஹம்ஸ ரூபி

## (தியாகேசர் பெருமை)

(பல்லவி)

ராஜஹம்ஸ ரூபி யாகி நடம்புரிந்த
மாசற்ற மாமணியே!

(அநுபல்லவி)

நேசத்துடன் தினம்தினம் பேசித் துதிக்கும்நிஜ
தாஸர் மனவிசேஷ ஸாரக்ராகி யாகிய (ராஜ)

(சரணங்கள்)

1. மிஞ்சும் விவேகத்தின் மேல்படி ஆகவும்
செஞ்சடை கொண்ட சிவயோகி ஆகவும்
வஞ்சகச் சித்தர்க்கு மறைபொரு ளாகவும்
மனமுற் ருேருள்ள மணிவிளக் காகவும் (ராஜ)

2. திங்கள் அணிந்த திகம்பர ஞகவும்
பொங்கிய செல்வம் புகழ்ச்சிய தாகவும்—மலை
மங்கைமகிழ்ந்த மகாதேவ ஞகவும்
மங்கள ரூப மஞேன் மணி யாகவும் (ராஜ)

3. தீராது தீர்க்கும் திருவரு ளாகவும்
மாரனைக் காய்ந்த மகாப்ரபு வாகவும்
பாரில்லா இன்பப் பிரவாகம தாகவும்
ஆரூரில் வாழும் ஐயன் தியாகனுகவும். (ராஜ)

# வசந்தத் தியாகர்

(பல்லவி)

சிந்தித்தோர் அதிக சொந்தா!

(அநுபல்லவி)

சந்தி அந்திப்பிறை சூடிநின்ற
அந்த வைபோ கானந்தா! (சிந்தித்)

(சரணங்கள்)

1. பாசஇருள் தீர்க்கும் மன்னு,
தாஸ கோடிஸம் பன்னு,
சேஷ சாயி மனம்கொண்ட
சாஸ்வத சுப்ர ஸன்னு! (சிந்தித்)

2. கூடும்வினை அறச்செய் தன்யா,
கோடி மன்மத லாவண்யா,
பூடகசம் சார பந்த
போதம் விலக்கும் புண்யா! (சிந்தித்)

3. வந்த டைந்தோம் பாபநாச,
சுந்தரர் மனப்ர காச,
வந்தனம் வந்தனம் ஈச,
வஸந்தத்தியா காதி ராஜ! (சிந்தித்)

# அகிலாண்ட நாயகி துதி

(பல்லவி)

ஜம்பு நாதப்ரியே,
சுந்தரி தேவி, அகில வந்தித கௌரி!

(அநுபல்லவி)

அம்புலிதன்னை ஆண்டளிக்கும் ஐங்கரஜனனி! (ஜம்பு)

(சரணங்கள்)

1. குங்கும மங்கள சரணி, கோர பாப தரணி,
பங்கஜதள நயனி, பக்தபவ மோசனி! (ஜம்பு)

2. மூதறிவில் முதல்வ ரான முக்கண்ணர் தேவி,
வேதசாஸ் திரத்தில் விளங்கும் விமலஸ்வ ரூபி;
காதலித்தேன் உன்றன்மேலே கவலைபொறுக் காமலே
ஆதரிப்பாய் இனிமேலே அம்புஜக்கரத் தாலே. (ஜம்பு)

# அலமேலு மங்கைத் தாயார்

(பல்லவி)

தாமரையில் வந்துதித்த கோமளவல்லித் தாயார்.

(சரணங்கள்)

1. செந்தாமரைப் பூநடுவில்—என்றன்
அந்தரங்க மாய்விளங்கும் அலமேலு மங்கைத் தாயார்.
(தாமரை)

2. மட்டில்லாப் பூஷணம் சாத்தி
மாதுளம்பூப் பட்டுடுத்தி
அட்டகாச மாய்விளங்கும்
அலமேலு மங்கைத் தாயார். (தாமரை)

# ஆர் துணே?

(பல்லவி)

நீ துணை அன்றி எனக் கார் துணை யம்மா?

(அநுபல்லவி)

ஆதி மகேச்வரி, அகில சராசரி,
அத்வை தத்தில் சிறந்த மகேச்வரி. (நீ துணை)

(சரணம்)

அண்டர்க் கருள் புரிந்து பண்டா சுரனை வதைத் தாயே -
உனக்
கடியவரை ரக்ஷிக்கும் நெடிய விருதுபடைத் தாயே,
தொண்டு செய்து வணங்கி நின்று சிந்தாமணி
க்ருகத்தி லும் சம்ஹாரத்தில் மருவு மனோன்மணி,
மண்ணுசை கொண்ட மாதர் மனோன்மணி,
மங்கையர்க் கரசியே, மகிழும் சிரோன்மணி. (நீ துணை)

# ஏகாம்பர ராணி

(பல்லவி)

காஞ்சி நகரில்வாழ் கஞ்ச மலர்நயனி
கருணை செய்வாய் ஏகாம்பர ராணி.

(சரணங்கள்)

1. தஞ்சமென் றோரைக் காக்கத் தஞ்சைநகரில் வந்து
செஞ்சிலம் படிவைத்த செல்வியே, தாயே,
அஞ்சிவந் தேனம்மா, உன், அருமைத் திருவருளால்
வஞ்சனைக ளைத்தீர்ப்பாய் மாதவன் சோதரி! (காஞ்சி)

2. குந்த முகுளஅர விந்தம் பொருந்தும்யந்த்ர
மந்த்ரமக ரந்தசுகு மாரி,
வந்தெனை ஆள்வார் மாவடி யார்பாரி,
கந்தர்ப்ப கோடிலா வண்யகௌ மாரி! (காஞ்சி)

3. தேடித் திரிவோர்உள்ளம் நாடும் வினைகளைந்து
சாடிக் கருணைசெய்யும் சவுந்தரி யே, தாயே,
பாடகப் பொற்சிலம்பும் பரிமளசு கந்தமும்
கூடி விளங்கும்காம கோடிபீட வாசியே! (காஞ்சி)

4. பொய்யான உலகத்தை மெய்யென் றுணருமிந்த
ஐயந் தவிர்த்தென்னை ஆண்டு கொள்வாய்.
வையகம் புகழ்பெற்று விளங்கும் திருவாரூர்
ஐயன் கிருபை அருள்வாய் காமாட்சி! (காஞ்சி)

# கமலாம்பிகை துதி

(பல்லவி)

அம்பாகமா லாம்பா, ஆதிபரா சக்தி,
ஆரூர் தனில்விளங்கும் ஐய னுடைய பாரி.

(சரணங்கள்)

1. அஞ்சிவந்த பேரை ஆதரிப் பாயே;
ஆதி பராசக்தி, ஜோதிஸ்வ ரூபி,
சஞ்சலம் தீர்த்தருள் தயாபரி யானவளே,
சாமள வர்ணருக்கு ப்ரேம சகோதரி! (அம்பா)

2. காலனை உதைத்திட்ட கணவனை மாலையிடக்
கடுந்தவசில் இருப்பாள், கமலாம்பா, கல்யாணி,
பாதச் சிலம்புபார்க்கப் பத்துலட்சம் கண்வேணும்
பண்ணும் தவசையோ சொல்லி முடியாது. (அம்பா)

3. திங்கள் தனைஅணிந்த செஞ்சடை நாதனை
வஞ்சி மகிழ்ந்தவள் பொங்கிப்பூ ரித்துநின்றாள்;
வானோர் புகழும்பரன் வாமபாக தேவி
வந்துதித்தாள் சந்த்ர பிம்பம்போல் ஆண்டிக்கு*.
(அம்மா)

---

(ப-ம)* ஐயனுக்கு.

# கமலாம்பிகை கல்யாணம்

(தியாகேசர் வருகை)

1. வன்மீகப் புற்றரடி, வாம பாக சித்தரடி,
சின்மயமாம் சித்தரடி, சோமாஸ்கந்த கர்த்தரடி.

2. சுந்தரர்க்குத் தோழரடி, சோமாஸ்கந்த ரூபரடி,
அந்திக்காப் பழகரடி, அசைந்தாடும் செல்வத்
தியாகரடி.

3. சந்திரரைத் தரித்துக்கொண்டார்; மந்திரநீ றணிந்து
கொண்டார்;
ராஜர் சபையில் வந்துநின்றார்.

(நலங்கிடல்)

1. மிஞ்சியுடன் நூபுரமும் மின்னலிடை மிகத்துவளக்
கஞ்சமலர்க் கண்ணுடையாள் மஞ்சள்தனைக் கையில்
எடுத்தாள்.

2. கஸ்தூரி புனுகுபன்னீர், கலந்தெடுத்த பரிமளத்தால்
வக்ஷஸ்தலம் மீதில்கந்தம் மங்கையவள் பூசிநின்றாள்.

3. கங்கையுடன் மதிபூண்ட—சிவ
சங்கரனார் திருமுடிமேல்
செங்கழுநீர் ஜாதியினால் சுந்தரியும் சூட்டி நின்றாள்.

4. முக்கண்ணைத் தான்படைத்தோர் முகாரவிந்தம்
தனக்கேற்கத்
தக்கதில கம்எடுத்துத் தையலவள் தானும்இட்டாள்.

5. ஆணிப்பொன் அட்சதையும் அணிந்தசெம்பொன்
அப்பளமும்
வேணபடி தானெடுத்து விமலருக்கே உபசரித்தாள்.

6. நாசமற்ற நாதருக்கு நங்கையவள் உபசரித்து
வாசனைத்தாம் பூலந்தன்னை த்யாகேசருக்கென்
றேஎடுத்தாள்.

(பத்தியம்)

(அம்பிகை)

அத்வைத ரூபரஸ அகண்டிதா காரனே,
வித்தாகி உலகில் விளங்கும் விபவனே,
வித்யாப்ர பாவமே, விமலவை போகமே,
நித்யமாய்ச் சித்தந்தனில் நிறைந்த மயமே,
உத்தம நீபமய ரத்னமாம் ஜோதியே,
பெற்றிடும் பெரியோர்க்குப் பெருகும் நிதியே,
தத்வரஸ நாதமே, தன்மயா தீதமே,
புத்திதனில் அருவான போத மயமே,
சுத்தநிர்க் குணப்ரம்ம சுகவாஸமே,
உற்றுணர்ந் தோர்அறியும் உல்லாஸமே,
பக்தப்ர காஸமே, பவநாசமே,
சித்ரூப நேசமே, சிதாகாசமே!

(பத்தியம்)

(தியாகேசர்)

வாஸவன் ஆதிஅயன் மாலுடன் திருமகளும்
வருந்தியே துதிசெய்து வணங்கும் மாதே,
ஈசான்ய முகம்பார்த்து எப்போதும் த்யானித்து
என்னையே நினைந்துதவம் செய்த மாதே,
தாசர்கட் குபதேசம் பேசுகிற போதிலெதிர்
சந்தித்த தால்சபதம் செய்தேன் மாதே,
பேசும்மொழி தவறக்கூடாதுசொன்னேன்;
பிரியமுடன் தாம்பூலம் பிடிஎன் கண்ணே,
ஆசையாய் வசந்தமண் டபத்தில் உன்னை
ஆளுவேன்; இமயகிரி அரசன் பெண்ணே!

# கல்யாண குண நிதி

(பல்லவி)

கல்யாண குணநிதியே,—அநந்தானந்த
கல்யாண குணநிதியே!

(அநுபல்லவி)

மண்பரி மீதில்ஏறி மயங்குவர் தமைப்போலன்றி
மதியுற்ற குலதெய்வத்தை வணங்கலுற்றேன். (கல்)

(சரணம்)

ஏழையர்க் குபகாரி, ஈசுவரர்க் குகந்த பாரி,
மாசில்லாக் குமாரியே, மாயா தாரியே! (கல்)

# கோமதி அம்மை துதி

1. கோமதி உன்றன் திருமலர் அடிகளைச்
சிந்தித் திருப்பதுநான் எப்போ?
காமேச் வரிஉன்றன் காமியம் நினைத்தோர்க்குக்
கைவல்யம் தருவது எப்போ?

2. வந்த வியாதிகளைத் தீர்த்துர க்ஷித்தென்னை
[வாழ வைப்பதிங்கே எப்போ?]
உன்னை நம்பியே உலகத்தில் நான்இருக்கேன்—
எனக்கு
உறுதி சொல்வதும் எப்போ?

3. பூமி புகழும்இந்தப் புண்யவ தீச்வரி,
புண்யங்கள் செய்வதுநான் எப்போ?
மோகாம் புதிகடந்து பாச வலைஅரிந்து
முக்தி கொடுப்பதுநீ எப்போ?

(2)

1. அம்பா கோமதி உனைக்காண ஆவல்கொண் டேன்நான்
துன்பம் போக்கித் துரிதம் மாற்றிச் சேர்த்துக்
கொள் வாயே;

2. கஷ்டம் தீர்த்துக் கவலைமாற்றிக் காத்து ரக்ஷிப்பாய்—
என்
இஷ்ட பந்து நீயே என்னைச் சேர்த்துக்கொள் வாயே.

# சாரதாம்பிகை துதி

(1)

(பல்லவி)

சாரதாம் பாஉன் பாதம் தேடிவந் தேன்இங்கே;
சரணம் என்றுநம்பி ஆதரிப்பாயே! (சாரதா)

(சரணங்கள்)

1. உன்னைத் தேடிவந்தேன்; நின்னுள்ளம் இரங்காதோ?
இரங்கி வரம்தந்து ஈச்வரி யேகாப்பாய். (சாரதா)

2. கண்களி னால்உன்னைக் கண்டதும் இல்லையோ?
காலடி யில்வாழும் கருணை கடாக்ஷியே! (சாரதா)

(2)

(பல்லவி)

சாரதாதேவி வாவா, சரிதம் செப்ப நாவில்
சீரிதா யிருந்து சிறப்புற்றிட நீயே (சாரதா)

(அநுபல்லவி)

சரணம் கோடி செய்தேன்; சரஸ்வதி, என்அம்மா,
தருணம் ஆள வேணி தயைசெய் யடிசும்மா. (சாரதா)

(சரணங்கள்)

1. செங்கமலத் தாள்என் சிரத்தணிந் தேன்தாயே,
சங்கை யறநாவில் சாந்நித்ய மாவாயே,
பங்கஜா சனியே, பத்மலோ சனியே,
பங்கமாகும் என்றன் பாபவி மோசனியே! (சாரதா)

2. மந்தார கைரவ மாலிகா தாரணி,
மந்த ஸ்மிதமுக மண்டல ஸோபினி,
சுந்தர கேயூர ஸோபித பூஷணி,
சந்ததம் ஆனந்த சந்தோஷ ப்ாஷிணி! (சாரதா)

3. விஞ்சையர்கள் ஏத்தும் வேத ஸ்வரூபிணி,
வஞ்சமற் றோர்நாவில் வாழும்என் ஆரணி,
தஞ்சம் அடைந்தேனே, தாயேநீ காரணி;
துஞ்சல்தீர்க் கும்என்றன் துணையாகும் பூரணி.
(சாரதா)

---

# சிவகாமி சுந்தரி திருக்கல்யாணம்

சிவகாம சுந்தரியாள் திருக்கல்யாணத்தைச்
சொன்னாலும் சுகங்கள் உண்டாகுமே.
சொன்னாலும் ஜயங்கள் உண்டாகுமே. (சிவ)

கரிமைந்தனைப் படைத்தோட்கும் கந்தனைப்
பெற்றவட்கும்
கனக சபேசருக்கும் கல்யாணம் நானுருக,
கல்யாணி, மகாத்ரிபுர சுந்தரி, கார்த்திகேயன் ஜனனி.
(சிவ)

ஐப்பசி பூரத்தில் அருந்தவசுகள் செய்ய
ஆதி சிவனைப்பிராண நாதராய் அடையவே
முத்துப்போல் ஒருவார்த்தை பெற்ற பருவதரிடம்
மொழிந்தாளே சுந்தரியாள்; இருபாதத் தில்பணிந்து.
(சிவ)

நித்யகல் யாணிசொல்லப் பெற்றபர் வதராஜன்
அற்புதம் இதுவென்று அக்னிபோல் கண்சிவந்து
பச்சைக் குழந்தைநீயும் தபசுக்குப் போகஎன்றன்
புத்ரியே, செல்வமே, புத்திசொன்ன தாரம்மா? (சிவ)

கஸ்தூரிப் பொட்டுமிட்டுக் கண்ணுக்கு மைஎழுதிச்
சிற்றிடையில் பட்டுடுத்தி உச்சியை மோந்துகந்து
பத்ம மலர்முகத்தில் ஒப்பிலாச் சீர்வடிவைப்
பார்த்துமே
மேனகை நோக்கிப் பார்த்தாயா அம்மா! (சிவ)

பர்த்தா எவரென்னலுமே பரிபூரண மாய்நிறைந்த
திருத்த முடையகம்பா தீரத்நில் தவம்செய்ய
சீக்கிரமாய்ப் போறேன்என்றாள், சிவகாம சுந்தரியாள்.
(சிவ)

தாய்வார்த்தை கேளாமலே சீரான தோழியுடன்
தாரா கணநடுவே சந்திர உதயம்போலே
தருணேந்து சேகரரைத் தார்மாலை சூடவென்று
சங்கரி, ஓங்காரி தபசினில் இருந்தாளே. (சிவ)

நாம்வைத்த விருட்சமெல்லாம் பூத்துப் பலிச்சிருக்கு;
பரப்பிரம்ம ரூபரோ ப்ரத்யட்ச ராகவில்லை.
வாடிக் கலங்கிச்சற்றே மனத்தினில் தியானம்
பண்ணித்
மந்த்ர சொரூபியாய் வாக்கில்உச் சரித்தாளே. (சிவ)

மாலை தவசுசெய் நீலகண் டரும்அப்போ
லீலா விநோதராகத் தேவி சமீபத்திலே
ஆரும்இல் லாவனத்தில் தேடிவந் தேனடி
பொண்ணே,
சூடாய்நீ மாலைதன்னைச் சேராய்நீ என்னைஎன்றார்.
(சிவ)

நடுக்கும் கிழவன்சொல்ல நகைத்துச்சுந் தரியாளும்
நடக்க முடியவில்லை; நல்லறிவு தானுமில்லை;
சுருக்காக மாலைசூடிச் சேருபொண்ணே என்கிறனே!
—இந்தத்
துடுக்கன்எங் கேடிவந்தான்? தோழி, நீ கேளாய்
என்றாள். (சிவ)

வடிவான வார்த்தைகேட்டு ஸ்வாமி மந்தஹா
ஸம்செய்து
சடைக்குள்ளே இருக்கின்ற ஜலரூப மானகங்கை
குமிழ்ந்து பெருகக்கண்டு திடுக்கிட்டு மையல்கொண்டு
கடைக்கண்ணால் பாராயென்று கட்டிக்கொண்டாளே,
நித்யகல்யாணி, மகாத்ரிபுர சுந்தரி. (சிவ)

மங்கள கௌரியாள் ஆலிங்கனம் செய்யலுமே
கங்கா தரருமப்போ இங்கித மாய்ச்சிரித்து
வலுக்கள் பேசிச்சற்றுக் கால விளம்பமுன்னே
மகாதேவ வஸ்துஅப்போ மணவா ளக்கோலம்
கொண்டார். (சிவ)

சக்திசிவ காமவல்லி தபசு பலித்துவராள்;
சிற்சபை நடராஜர்க்கு அற்புதமாய் மாலைபோட;
பட்டுப்பூவால் பந்தல்போட்டு ரத்னதீபம் ஏற்றி
வைத்துச்
சர்க்கரை பழத்துடனே சந்நிதியில் காத்திருக்காள்,
கல்யாணி, மகாத்ரிபுர சுந்தரி. (சிவ)

(2)

(பல்லவி)

சந்தோஷ மாய்நிச்சய தாம்பூலம் செய்தார்,
சந்திர சேகரர்க்கும் சங்கரிக்கும்.

(அநுபல்லவி)

இந்த்ராதி கின்னரர் கிம்புருஷர்கள்
அந்தர லோகம் சுகந்தம் சொரிந்திடச் (சங்)

(சரணங்கள்)

1. பாடகம் பொற்சிலம்பும் மின்னப் பராசக்தியும்
பாங்கியரோடு நடந்தாள்;
ஆடக க்ஷேத்திரத் ததிபதி யோடேக ஆசன மீதினில்
வீற்றிருந்தாள்;
கூடி உமைபாகம் மேவிய கோலத்தைக்
கோடிகோடி கோடியுகம்
தேடித் தவம்செய்த பேர்கட்கும் கிட்டுமோ?
தேவதேவ தேவர்கள் போற்றியே. (சங்)

2. காரண காரிய மெய்ப்பொரு ளும்நல்ல
காட்சி கொடுத்திட வேநினைந்தார்.—ஞான
வாரி யான மகாப்ரபு வும்திவ்ய
மங்கள ரூபந் தனையடைந்தார்
பாரில் உள்ளவர்கள் பாக்ய வசப்படி
பக்திக் கநுகுண மாய்நிறைந்த
மார நிக்ர கரும் பார்வதி யுடன்சுக்ர
வார தினத்தில் மகிழ்ந்துவரார் சேர்ந்து. (சங்)

3. பங்கஜா சனரும் ஸ்ரீஹரி யும்அவர்
பத்தினி தங்க ளுடன்வரார்;
மங்கை இடங்கொள் விடங்கரும் அங்கொரு
மங்கள மூர்த்தியுட னேவரார்;
துங்க மறைகளை ஓதிச் சுபலக்னம்
என்றே வசிஷ்டரும் கூறச்
சங்கம்ரு தங்காதி சங்கீதங் கள்சேரச்
சங்கரரும் அந்த ரங்க சபைஏற. (சங்)

4. ஈஷணுதி யற்ற தாஸ கோடிகளும்
சாச்வத சம்பத்தைத் தாம்அடைய
மாசற்ற ஜோதியும் மாநுஷக் கீர்த்தியால்
வந்து விசித்திர லீலை செய்ய
நேசத்தொடேகண்டே பூசித்த பேர்களுக்கு
நிச்சய மாக அருள்புரியும்
நாச ரகிதரும் நங்கை யுடன்த்யாக
ராஜசிம் மாசனத்தில் நிற்கக் கண்டு. (சங்)

(3)

1. சாஸ்திரிமார் பூர்ணகும்பம்
சந்நிதியில் கொண்டுவரப்—பொற்
பாத்திரத்தி லேதளிகை பரிபூர்ண மாகவர
வாத்தியார் வசிஷ்டர்அதி சீக்கிரத்தில் ஓடிவர
வேர்த்திளைப்பு யாராமல் வெண்சா மரங்கள் வீசிவர. (சாஸ்)

2. சட்டமுடன் திட்டாணியில் தர்ப்பைகளைத்
தான்பரப்பிச்
சாந்திமந் திரங்கள்சொல்லி மாந்தளிரும்
கொண்டுவரச்
சப்தரிஷி தேவிமார்கள் நவதானியம் கொண்டுவரச்
சுற்றிவந்து பாலிகையைப் பத்தினிமார்
தாம்தெளித்தார். (சாஸ்)

3. பங்கஜத்தில் வந்தவட்கு மங்களமாம் கௌரிஎன்று
சங்கரிநா ராயணி தாக்ஷாயணி பார்வதிஎன்று
அம்குலங்கள் சொல்லியவர் சிவசங்கரிக்கு நாமமிட்டுத்
தங்கநூலால் கைதனிலே கங்கணமாய்த்
தானிசைத்தார். (சாஸ்)

4. ராஜசுதை யானஅம்மன் நவரத்ன கஜம்ஏறி
நாகரிக ரூபத்துடன் நா லுவீதி சுற்றிவராள்.
கோபுர வாசலில்நட ராஜர்வரார் மாலைசூட
வானமரும் தேவரெல்லாம் பூவருஷ மாய்ச்சொரிந்தார்.
(சாஸ்)

(4)

1. ஆனையை விட்டி றங்கி னாள் அந்த வேளை
பானு கோடி உதய மானது போலே
தீனர க்ஷகருடன் தேவியும் கூட
வானுல கத்தோர் மலர்மாரி போட. (ஆனை)

2. காலில் கெஜ்ஜைகள் கலீர்கலீர் என்னச்
சேலை ஒளிதிசை பளீர்பளீர் என்னக்
காலில் மெட்டியுடன் நூபுராதி சப்திக்கக்
கெட்டிக் கொலுசுபீலி பாடகம் ஜொலிக்க. (ஆனை)

3. கண்டசரம்,காதில் கம்மல் விளங்க
ஜெண்டை கெம்புசரம் பளீர்பளீர் என்னக்
கரத்தில் கங்கணவஞ்சிக் காப்புகள் அசையச்
சிரத்தில் ராக்கொடி குஞ்சம் சடைபில்லை அசைய.
(ஆனை)

4. பத்தரை மாத்தில் பதித்தரத் தினத்தால்
நத்துப்புல் லாக்கு மூக்குத்தி கள்விளங்க
விஸ்தார நயனத்தில் அஞ்சனம் விளங்கக்
கஸ்தூரித் திலகங்கள் நெற்றியில் விளங்க. (ஆனை)

5. நேசமுள் ளநிஜ தாசர்கள் கண்டார்.
ஈசன்பர தேசவேஷங்கள் கொண்டார்.
பூசியகந் தப்பொடி பரிமளம் வீச
வாசனை சுகந்தமணம் வசீகரிக்க. (ஆனை)

6. மங்கள ரூப மனோன்மணி அப்போ
மங்கையர் கள்கொள்ளும் மணக்கோலம் போல
நேச முள்ளநிஜ தாசர் கண்டார்,
ஈசன் பரதேச வேஷங்கள் கொண்டார். (ஆனை)

(5)

ஊஞ்சல்

முத்திதரும் ஆனந்த முகவி லாசா,
முசுகுந்த வரதமுனி ஹ்ருதய நேசா,
சக்தியுடன் விளங்குசிவ த்யாக ராஜா,
தன்மயமாய் நின்றமனந் தன்னில் வாசா,
புத்தியினால் அறிந்துருகும் போதம் பூட்டினர்க்குப்
பிரம்மாதிக் கரிதான புகழைக் காட்டி
அத்துவித மானஇன்ப அமுதை ஊட்டி
ஹம்ஸோஹப் பரவெளியில் ஆடிர் ஊஞ்சல்.

லாலி

கனகநவ ரத்னசிம் மாசனா தீச,
ஸனகாதி முனிவந்த்ய தியாகாதி ராஜா, லாலி லாலீ.
அந்தமுடன் ஸ்ரீஹரிபோல் சிந்தைகுடி கொண்டீர்;
சந்ததமும் சுந்தரர்க்கு வந்துதூது சென்றீர்.
லாலி லாலி.

(7)

லீலாவி நோதநிஜ போதத் தாலே
பாலெடுத் திட்டாளே பாதத்தின் மேலே.
அச்சுதர் சோதரி உச்சித மாகப்
பச்சைப் பொடிசுற்றித் திருஷ்டிகள் போக்கித்
தீர்த்தமும் தீபமும் தேவியர் கொணர்ந்தார்.
வாத்தியத் துடனே வலஞ்சுற்றி வந்தாள்.
சொம்பொன்மணி, தேங்காய், திவ்யதாம் பூலம்,
அம்பிகைக்கும் ஐயனுக்கும் கொடுத்தார்.
பார்வதியை ஈசன் பக்கத்தில் சேர்த்தான்.
ஹாரத்திக் காப்புகள் அக்ஷணம் எடுத்தார்.
பாணி பிடித்துவலப் பாதம்முன் வைத்தார்.
ஆணிப்பொன் தோரணத்தால் அலங்கரித்த
மாணிக்கத் தானியங்களால் எங்கும் நிறைத்தாள்.
தானேதன் கைகளால் சகலர்க்கும் கொடுத்தாள்.
பூமியில் பொற்பாதம் பொருந்தவே நடந்தாள்.
நாம ரூபரகித நாதனொடு மகிழ்ந்தாள்.
வீணை முதலநேக வாத்தியம்கோஷித்தார்.
வாணி கௌரீ கல்யாணம் உரைத்தாள்.

(8)

அஷ்டதிக்கும் அதிரவே பேரிசங்கம் முழங்கவே
அற்புதமாய்ப் பருவதரும் மேனையும் தாரை வார்க்கவே
மட்டில்லாத வானவர்கள் புஷ்ப வர்ஷம் சொரிய
ரத்னமணி மண்டபத்தில் கட்டினார்திரு மங்கல்யம்.
சரிபவளக் கைதனிலே பொரிகளிடப் பூபதியும்
கரிபரிகள் கட்டிநிற்கும் கனகமணிப் பந்தலிலே

வரிசையாக ரம்பையர்கள் நடனமாடித் துதிகள்செய்ய
மயில்போலே கவரிவீச வானவர்பூ மாரிபோடப்
பத்தருக்குப் பரமபதம் காட்டுகிற கைகளாலே
நித்யகல் யாணியுடைப் பத்மமலர்ப் பாதந்தொட்டு
அக்கினியைச் சுற்றிவரார், புஷ்பவர் ஷம்சொரிய.
சுத்தபரி பூர்ணரப்போ சற்றேஆ லஸ்யம்செய்தார்.
அச்சுதர் அதை அறிந்து ஐயருடன் ஏதுசொல்வார்;
நித்யகல் யாணியுடைப் பத்மமலர்ப் பாதம்தொட
லஜ்ஜைவரு வானேனிப்போ நீலகண்ட ரே,உமக்கு?
அர்த்தசரீ ரங்கொடுத்த நித்யகல் யாணியன்றோ?
மச்சினரும் சொல்லலுமே மகாதேவர் ஏதுசொல்வார்;
மாயை யுள்ள பேருக்கன்றோ மாதரிடம் சுற்றுவது;
மங்களமாய் லக்ஷ்மியை மார்தனிலே கொண்டிருக்கும்
வாசனேயி ருலன்றோ ஏதுசொன்னீர் என்னேஎன்றார்.
மாயைஇல்லே என்றலுமே வாமனரும் ஏதுசொல்வார்;
பாபஹரம் பண்ணிவைக்கும் பாகீரதி யைச்சிரசில்
சர்வதா சுமந்திருப்பீர்; தோஷம்இல்லேயோ உமக்கு?
போதும்வாயை மூடுமென்று பூபதியும் தாம்சிரித்தார்.
பூபதி சிரித்தலுமே பூர்ணநாதர் ஏதுசொல்வார்.
கோபியர்கள் சேலேயெல்லாம் வெளியே மரத்திலேறி
ராதே,ராதே, என்று சொல்லி சர்வதா திரிந்திருக்கீர்.
போதும்வாயை மூடுமென்று பூமாலே போடலுற்றார்.
பூமாலே போடலுமே சூர்மநாதர் ஏதுசொல்வார்;
தாருகா வனந்தனிலே சதகோடி மன்மதராய்
ரிஷிபத்னி தேவிமாரை லீலேயினல் மாயைசெய்தீர்.
வாயுமுண்டோ தங்களுக்கென்று மகாவிஷ்ணு
ஏசலுற்றார்.

பார்வதி நாயகரும் பாக்யவதி ஆனவளும்
ஏசலாகி இருபேரும் பேசுகிற வேளைதனில்
பூரிஆசீர் வாதம்செய்யச் சாவகாசம் ஆறதென்று
வானவர்கள் தேவரெல்லாம் பூவர்ஷ மாய்ச்சொரிய
அளவற்ற தனங்களை அளகேசன் கொண்டுவந்து
மலைமலையாக் குவித்துவைத்து வாரிவாரிப் பூரி
செய்யத்
தருணத்தில் நாரதரும் சங்கீத வீணைபாட
அமரர்கள் மகுடத்தின் கனகப் பொடிஉதிரத்
பூரிஆசீர் வாதம்செய்து பூசுரரும் வானவரும்
நான்முகனும் இந்திரனும் சேஷசாயி மாலுடனே
வாணி, அருந்ததி, இந்த்ராணியுடன் லக்ஷ்மியும்
பார்வதிசமேதராய் நடராஜர் வீதிதனில் வரார்;
வீதிகள்வீ திகள்தோறும் செப்பனிடு வார்கள்சிலர்;
மேடுபள்ளம் நிரவிக்கொண்டொப்பனிடு
வார்கள்சிலர்:
மாதர்திண்ணை மெழுகியே கோலமிடு வார்கள்சிலர்;
வாழையோடு கன்னிக்கரும்பு கமுகும்நடு வார்கள்
சிலர்;
பத்திபத்தி யாகப்பெண்கள் பக்திசெய்திடு வார்கள்
சிலர்;
சுத்தபஞ்சாட் சரம்ஜபித்து முத்தியடை வார்கள்
சிலர்;
முத்தாலா லத்திகும்பம் சுற்றிஎடுப் பார்கள்சிலர்;
அத்தன் நேர்மைகண்டே ஆனந்தமடைவார் சிலர்;
மிஞ்சியுடன் நூபுரமும் மின்னலிடை மிகத்தளரக்
கஞ்சமலர்க் கண்ணுடையாள் மஞ்சள்தனைக்
கையிலெடுத்தாள்.

கஸ்தூரி புனுகுபன்னீர் கலந்தமைத்த பரிமளத்தால்
வக்ஷஸ்தல மீதில்கந்தம் மங்கையவள் பூசிநின்ருள்.
முக்கண்ணைத் தான்படைத்த முகாரவிந்தம் தனக்
கேற்கத்
தக்கதில கம்எடுத்துத் தையலவள் தான்இட்டாள்;
கங்கையுடன் மதிபூண்ட சங்கரனுர் திருமுடிமேல்
செங்கழுநீர் ஜாதியினுல் சுந்தரியும் சூட்டிநின்ருள்;
ஆணிப்பொன் அக்ஷதையும் அழகுசெம்பொன்
அப்பளமும்
வேணபடி தான்எடுத்து விமலருக்கு உபசரித்தாள்.
நாசமற்ற நாதருக்கு நங்கையவள் உபசரித்து
வாசனைத்தாம் பூலந்தியா கேசனுக்கென்று
உபசரித்தாள்.

(பத்தியம்)

அத்வைத ரூபரஸ அகண்டிதா காரனே,
வித்தாக உலகில் விளங்கும் விபவமே,
வித்யாப்ர காசமே, விமலவை போகமே,
நித்தமாய்ச் சித்தத்தில் நிறைந்த மதமே,
உத்தம திபமய ரத்னமாம் ஜோதியே,
பெற்றிடும் பெரியோர்க்குப் பெரிய நிதியே,
தத்வரஸ நாதமே, தன்மயா தீதமே,
புத்திதனில் அணுவான போத மயமே,
சுத்தநிர்க் குணப்ரம்ம சுக வாசமே,
உற்றுணர்ந் தோரடையும் உல்லாஸமே,
பக்தப்ர காசமே, பரம சிவமே,
சித்ரூப நேசமே, சிதாகாச மே!

———

# சிவகாமவல்லி துதி

(பல்லவி)

இனிமேலாகிலும்உன்றன் கருணைக்கண் பாரம்மா,—என்
கவலையைத் தீரம்மா!

(அநுபல்லவி)

தினமும் திருநடம்செய் அனகன்றன் ஒருபாகச்
செல்வியே, சிவகாம வல்லியே, பரிவாக (இனி)

(சரணங்கள்)

1. இழுக்கும் புனலில் தூண்டில் இனிநான் சிறுமீன்போல்
இந்தப் பவவலையில் வந்து சிக்கவேயலால்
செழிக்கும் உலகில் நான்உன் வழித்தொண்டன் ஆகவில்லை.
தீனரட்சகிஎன்னும் திறத்துக் கிதுசெயலா? (இனி)

2. அருளாம்கொம் புத்தேனை அறிந்திடாத முடமா?
அடியேன்அஞ் ஞானத்துக் கமரும் இருப்பிடமா?
மருவும்என் உடல்பாவம் பெருகிப்பொங் கும்குடமா?
வணங்கும்என்னை ஆட்கொள்ள மனத்தினில் கபடமா? (இனி)

3. உன்னை அடுத்தஎனக் கின்னும்வி சாரமா?
உகந்துகுக தாஸன் வாழ்த்துமையேஇது சாரமா?*
என்னைக்காத் திடஉனக் கென்னபெரும் பாரமா?
ஏழைக் கருள்புரிய இத்தனை நேரமா? (இனி)

---

* ராமஸ்வாமி பாரதியாருடையது போலும்!

# சிவயோகாம்பிகை துதி

(பல்லவி)

சிவயோ காம்பா தேவி, நீயே—நான்
சிறியவள் ஆனாலும் சேவடி தருவாயே.

(அநுபல்லவி)

திகழுந் [திருஅன்னையே,] தீனரட் சகியே,
திரிபுர ஸுந்தரி, அருள்திருப்பெருந் துறைவாழ் (சிவ)

(சரணம்)

கருணா கடாக்ஷி, கரகம லாக்ஷி,
கரந்தனில் வீணா தண்டகா மாக்ஷி,
கனகசபேசன் நடனத்தின் சாக்ஷி,
கருணை மிகப்பொழிந்து அருள்புரி காட்சி. (சிவ)

## திருவாரூர்த் தேர்

கல்லுத் தேரும் ஓடிக்
கலியும் முறிஞ்சு
கமலாம்பா கல்யாணம்
கட்டாயம் நடக்கும்;—அதைக்
காண்பவர் யாரோ?

# திருவிளக்கு வழிபாடு

விளக்கே, திருவிளக்கே, வேந்தன் உடன்பிறப்பே,
ஜோதி மணிவிளக்கே, ஸ்ரீதேவி, பொன்மணியே,
அந்தி விளக்கே, அலங்கார நாயகியே,
காந்தி விளக்கே, காமாட்சித் தாயாரே,
பசும்பொன் விளக்குவைத்துப் பஞ்சுத் திரிபோட்டுக்
குளம்போலே எண்ணெய்விட்டுக் கோலமுடன்
ஏற்றிவைத்தேன்.
ஏற்றினேன் நெய்விளக்கு, என்றன் குடிவிளங்க.
வைத்தேன் திருவிளக்கு, மாளிகையில் ஜோதிவர;
மாளிகையில் ஜோதியுள்ள மாதாவைக்
கண்டுமகிழ்ந்தேன்.
மாங்கல்யப் பிச்சை, மடிப்பிச்சை தாரும்அம்மா!
சந்தானப் பிச்சையுடன் தனங்களும் தாரும்அம்மா!
பொட்டி நிறையப் பூஷணங்கள் தாரும்அம்மா!
பட்டி நிறையப் பால்பசுவைத் தாரும்அம்மா!
கொட்டகை நிறையக் குதிரைகளைத் தாரும்அம்மா!
புகழுடம்பைத் தாரும்அம்மா, பக்கத்தில்
நில்லும்அம்மா!
அல்லும் பகலும்என்றன்அண்டையிலே
நில்லும்அம்மா!
சேவித் தெழுந்திருந்தேன்; தேவி வடிவம்கண்டேன்.
வஜ்ரக் கிரீடம்கண்டேன்; வைடூர்ய மேனிகண்டேன்.
முத்துக்கொண் டைகண்டேன்; முழுப்பச்சை
மாலைகண்டேன்.

சவுரி முடிகண்டேன்; தாழைமடல் சூடக்கண்டேன்.
பின்னல் அழகுகண்டேன்; பிறைபோல
நெற்றிகண்டேன்.
சாந்துடன் நெற்றிகண்டேன்; தாயார்
வடிவம்கண்டேன்.
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுக்கண்டேன்.
மார்பில் பதக்கம்மின்ன மாலை அசையக்கண்டேன்.
கைவளையல் கலகலென்னக் கணையாழி
மின்னக்கண்டேன்.
தங்கஒட்டி யாணம் தகதகென ஜொலிக்கக்கண்டேன்.
காலிற் சிலம்புகண்டேன்; காலாழி பீலிகண்டேன்.
மங்கள நாயகியை மனம்குளிரக் கண்டுமகிழ்ந்தேன்.
(அடியாள் நான்.)
அன்னையே, அருந்துணையே, அருகிருந்து காரும்அம்மா!
வந்த வினைஅகற்றி மகாபாக்யம் தாரும்அம்மா!
தாயாகும் உன்னுடைய தாளடியில் சரணம்என்றேன்;
மாதாவே, உன்றன் மலரடியில் நான்பணிந்தேன்.
[இதைச் சொல்லித் தீபத்தைப் பதினாறு முறை
நமஸ்காரம் செய்வார்கள்.]

———

# துளஸியம்மன் மங்களம்

ஜயமங்களம் நித்ய சுபமங்களம்.

1. மங்களா தேவியே, சிங்கார ரூபியே,
வையங்கள் வாழவென்று வந்த தாயே,
எங்குமாய் இருப்பாயே, ஈரேழு லோகத்தில்.
எங்களை ரட்சிக்க வந்த தாயே! (ஜய)

2. வஜ்ரமணி மாலையும் வனமாலை ஓலையும்
வர்க்கமணி நல்முத்து மூக்குத்தியும்
கடகமொடு தோள்வளை கைவங்கி காப்புடன்
கலலென்று மின்னுகிருள், கனக துளசி.
(ஜய)

3. பச்சென்ற மேனியே, பங்கயக் கண்ணியே,
பவழம்போல் வாடாத பசுங்கிளியே,
அச்சுதன் தேவியே, அலங்கார ஸ்ரீதுளசி
அம்மா, அமிர்தமே, அலங்கார வல்லி. (ஜய)

4. காவேரி, காமாட்சி, கல்யாணி, மீனாட்சி,
கமலாட்சி, கங்கையம்மன், விசாலாட்சியே,
ராமேசு வரத்திலே நன்ருக வேவிளங்கும்
ராம துளசியுன்னை நம்பினேனே. (ஜய)

5. அட்டாள தேசமும் பதினலு லோகமும்
கொண்டாடி நாயகியைக் கும்பிடுகிறார்.
நட்டாத்துக் கண்மலர் பட்டாபி ராமர்க்குக்
கட்டாணி முத்திலே கனக துளசி. (ஜய)

6. செம்பொன் சதங்கையும் சிறுசலங்கை ஓசையும்
செந்தா மரைப்பதம் சிந்திக்கிறார்;
லம்போ தரருக்கு அம்மாமி ஆனவள்
அழகிலே நிறைந்தவள் லக்ஷ்மிதேவி. (ஜய)

7. திருப்பாற் கடலிலே தேவர்களும் அசுரர்களும்
மந்த்ரகிரி யைமத் தாகப்பூட்டி
ஆதிசே ஷக்கயிறு போட்டுக் கடையும்போ
தப்போது மிதந்துவந் தாள்துளசி. (ஜய)

———

# தேவி துதி

(1)

(பல்லவி)

சக்தியே என்னிடத்தில் மெத்தக்குற்றம்
கண்டாற்போல்
சித்தம் புலம்புதற்கென் செய்குவேன்?

(அநுபல்லவி)

கற்றபெரி யோரன்றேஉன் உற்றபூ சைக்குரியோர்—
புத்தி
சற்றும்இல்லாத பேதைய னேஅறிவேன்? (சக்)

(சரணங்கள்)

1. சங்கரி தேவி சகஸ்ர தள லோசனி,
சந்தோஷ வீணா தாரிணி,
மந்த்ரம் அறியாத மட்டி ஜனங்களின்
அந்தகா ரத்தைப்போக்கும் ஆனந்த ரூபிணி (சக்)

2. சுந்தரி, என் துயரம் எந்தநாளில் ஆறுமோ?
சுகமுற்றுச் சோகம்கொஞ்சம் மாறுமோ?
பந்துபோல் எழும்மனம் பதித்துன்பதம் சேருமோ
சின்மயா னந்தரஸத் தன்மயமாய்த் தோன்றுமோ?
(ஆதி)

3. சங்கரி,உன் னிடத்தில்என் சங்கதி களைச்சொன்னேன்;
சங்கடம் தீரடிஎன் அன்னையே!
பொங்கரவம் பூண்டசிவ சங்கர ருடைபாரி
செங்கமல நாபர்க்குச் சிங்கார சோதரி. (சக்)

(2)

(பல்லவி)

இன்னம் கருணை வல்லையோ?—ஓ அம்பா, என்மேல்
இன்னம் கருணை வல்லையோ?

(அநுபல்லவி)

அன்னையே, என் துயர் சொல்லவோ?
சின்னஞ் சிறுமகள் அல்லவோ? (இன்னம்)

(சரணங்கள்)

1. ஜீவாக்ஷி, ப்ராணாக்ஷி, அருளால்வந்த தவகுமாரி,
நாக பூஷணி, ந்யாய விசேஷணி,
நாராயணி, நயமஞ்சுள ம்ருது பாஷணி! (இன்னம்)

2. சித்ஸுகப் பரஒளியே, சிவஷண்முக நன்ஒளியே,
தற்பரன் விடும்ஒளியே, பரன்விடுபச் சைக்கிளியே!
(இன்னம்

——–

## நம் காளி

சுரைப டர்ந்ததைப் பாருங்கடி—சுரை
அத்தி படர்ந்ததைப் பாருங்கடி;
சுரைக்கும் கீழே நம்ப காளி
சொக்கட்டான் ஆடுருள் பாருங்கடி.

பாறை படர்ந்ததைப் பாருங்கடி—பாறை
பற்றிப் படர்ந்ததைப் பாருங்கடி
பாறைக்கும் கீழே நம்ப காளி
பன்னி ரண்டாம் ஆடுருள், பாருங்கடி.

## பத்திர காளி

வடக்கே வாடி செல்லியரே, வடபத்திர காளியரே,
தெற்கே வாடி சொல்லியரே, தென்பத்திர காளியரே,
காளியோடு வாதாடித்தான் கால்சிலம்பு காவுகொண்டு
ஏமனுடன் வாதாடித்தான் எருமைக்கடாக்
காவுகொண்டு
காவு வருகுதடி, காடேறித்தான் பார்த்திருந்தேன்;
சிம்மம் வருகுதடி, மோடேறித்தான் பார்த்திருந்தேன்;
பார்த்துக்கண்ணு பஞ்சடைஞ்சு பகலும்ஒரு
இருளடைந்தேன்;
நேத்துமுண்டு என்றன்மதி நினையாளாமே நீலிஅவள்?
நீலி துணிந்தாளாமே; நின்னைப்போலே யார்
துணிஞ்சார்?

# பரதேவி துதி

(பல்லவி)

தேவி எனைக்கா அம்மா—பர
தேவி எனைக்கா அம்மா!

(சரணங்கள்)

1. தேவி எனைக்கா அம்மா, தேவர் புகழும் அம்மா,
உன்பாதம் நம்பினேன், பக்தி எனக்களித்துப்
பாரினில் வந்து காஅம்மா,
பட்ச முடனேபா ரம்மா. (தேவி)

2. தாயே,லோ காம்பிகையே, சக்தி, சரஸ்வதியே,
............
உன்னை இன்பமுடனே துதித்திடும் ஏழைஎனை
இக்ஷணம் தனில்கா அம்மா. (தேவி)

# பார்வதி கதவு திறக்கும் பாட்டு

ஈசுவரரும் பார்வதியும் நேசத்துட னேஅதி
சிநேகமாய் இருந்தார்கள்.

1. ஜோதிமய சுந்தரியே, தோகைமயி லே,இப்போ
சொர்ணக் கதவைத் திறடி மானே!

2. அர்த்தஜாமம் கழிந்தபின் அற்புதப் பொற்கதவைத்
திறவென்று சொன்னது யாரோ?

3. மலையரா ஜன்குமாரி, மங்கையே, மாது,நான்
சங்கரன்தானடி மானே,—சொர்ணக்
கதவைத் திறவடி தேனே!

4. விந்தை யுடன்நடந்து சங்கரி பொற்கதவைச்
சிக்கெனத் தான்திறந்தாள், மாது;—சொர்ணச்
சங்கிலி திறந்தாளப் போது.

5. அஞ்சன விழியாளே, ஆயாச மாகவந்தேன்;
வெண்சாமரை வீசடி, மானே,—கந்த
பரிமளங்கள் பூசடி, தேனே!

6. அறுகு சிரசில்வைத்து விபூதி அணிந்தோர்க்குப்
பரிமள கந்தம்ஏது சுவாமி?—அதைப்
[பாவையர் யார்கொடுத்தார் சுவாமி?]

அர்ஜுனன் பூஜைசெய்தான்; அளவற்ற கந்தபுஷ்பம்
வாசனை வீசுதடி மானே;—கந்த
பரிமளம் வீசுதடி தேனே!

8. என்னையாளும் ஈசுவரரே, இளைப்பு மிகுந்ததேது?
என்ற னிடத்தில்சொல்லும் சுவாமி—அது
[யாரிடத்தில் பெற்றிட்டீர் சுவாமி?]

9. அந்தர வனந்தன்னில் அடைவுடன்பத் மாசுரனை
அழித்துவந்த இளைப்புப் பெண்ணே,—அவனை
விரட்டிவந்த இளைப்புக் கண்ணே!

10. பஞ்ச முகங்களெல்லாம் கஞ்ச மலர்கள்போலே
கொஞ்சம் சிவந்ததென்ன சுவாமி? – எந்தக்
[கோதையிடம் போய்வந்தீர் சுவாமி?]

11. பக்தியாய்ப் பாணன்என்னைச் சிரத்தையாய்ப்
பூஜைசெய்தான்;
நித்திரை விழித்தேண்டி பெண்ணே,—கொஞ்சம்
நித்திரை விழித்தேண்டி கண்ணே!

12. சங்கரர் தேகமெல்லாம் தாங்காமல் வேர்வைஎன்ன?
சாகசம் பண்ணுதேயும் சுவாமி – பொய்
சாற்றுதல் செய்யாதேயும் சுவாமி!

13. கவிபாடும் பக்தருடைக் கவலைகள் தீர்க்கவென்று
விறகு சுமந்தேனடி பெண்ணே,—கொஞ்சம்
விறகு சுமந்தேனடி கண்ணே!

14. கோமள வடிவமான குந்தள நாயகியே!
கோபங்கள் செய்யாதேடி மானே,—என்மேல்
பேதங்கள் எண்ணுதேடி தேனே!

15. முத்துமூக் குத்திநவ ரத்ன மணிஜொலிக்கக்
காந்தன் பதத்தைவந்து நாடினள்;—தேவி
கண்டு வணங்கிக்கொண் டாடினள்.

16. சங்கீதங்கள் கோஷிக்கச் சங்கரியும் பூஜிக்க
மங்களதாம் பூலம் மாற்றினாள்;—தேவி
தங்கக் கதவைமெள்ளச் சாத்தினாள்.

17. சியாமள வடிவான சுந்தரி நாயகிமேல்
காம தகனர்மெத்த மோகித்தார்;—அதி
இச்சையுடன்பாவனை பாவித்தார்.

18. ஆணி முத்துமாலை ஹாரங்களும்குலுங்க
மாணிக்கப் பொற்கதவை மூடினாள்;—கையில்
வீணை எடுத்துக்கீதம் பாடினாள்.

———

# பாலேயின் வீரம்

(சோபனம்)

உரண்டிஸம் பத்கரியால் உருண்டான் துன்
மதனென்று
மருண்டுவந் தசுரர்கள்முறையும் இட்டார்.
வெருண்டுபண் டாசுரன் குரண்டனை
அனுப்பினான்;
சுருண்டான் அவனும் அசுவாருடை யாலே;
புரண்டான் குரண்டனென்று தப்பிஓடி
வந்தபேர்
மருண்ட பண்டனிடம் மெரண்டு சொன்னார்.
கரண்டி எண்ணெயைக் காய்ச்சி வறண்ட
புண்ணில் விட்டாற்போல்
கலங்கினான் பண்டனும்.

பாலே: அம்மாநீ என்னுடைய ஆசைக் கநுமதி
தரவேண்டும் தாயே,
கூடிவரும் பண்டாசுரன் குமாரர்களை
ஜயித்து வருவேன் அம்மா!

லலிதா: ஏதடியோ பாலைப்பொண்ணே, இந்தமதி
வருவானேன்?
உனக்குப்பண் டாசுரனைக்
கண்ணிலே காணுவிட்டால்
காரியமும் செல்லுமோடி, குழந்தாய!
தண்டினி மந்த்ரிணிகளுண்டு;
சேனைகள் நூறுகோடிகள் உண்டு;
ஜெயிக்கப் பண்டன்புத்ரர்கள்
மண்டி வருவார்.
பாலையே,நீ போக வேண்டாம், குழந்தாய்!

பாலை: நிமிஷத்திலே ஜயித்துவிட்டு
நிச்சயமாய் ஓடிவரேன் இப்போ;
பாதத்திலே நமஸ்கரிச்சேன்;
பார்வதியே, போய்வருவேன் அம்மா!

———

# பிருகத் குசாம்பிகை கும்பாபிஷேகம்

(பல்லவி)

பிருகத் குசாம்பிகை கும்பாபி ஷேகம்பார்க்க.

(சரணங்கள்)

1. பார்க்கக் கிடைக்குமோ ஆனந்த வைபோகம்?
ஜோதிர் மகாலிங்க தெரிசனம் கண்டோர்க்கு (பிரு)

2. முப்பத்து முக்கோடி தேவர் பிராம்மணர்களும்
வேடிக்கை யாகவே வேதங்கள் முழங்கத்
தங்கக் குடத்திலே கும்ப கலசம்வைத்து
முத்துப்பந் தல்சேவிக்க வந்தஜனங்கள் மோகிக்க.
(பிர)

# மகமாயி

ஓடையை*வெட்டி ஒதுங்கவிட்டு
ஓடற தண்ணியிலே அணைபோட்டுச
சட்டம் செலுத்தியே மகமாயி
சவாரி வாறதைப் பாருங்கடி,
வேம்பு மகமாயி வேர்த்து வாராளாம்;
வெஞ்சம் குஞ்சம்கட்டி வீசுங்கடி;
வேப்ப மரத்தை வெட்டுங்கடி;
வெத்தலைக் கட்டை உதறுங்கடி;

---

(பா-ம்.)* ஓட்டையை

# மாரியம்மன் பாட்டு

[மாரியம்மன் காப்புக்கட்டினபோது அம்மனுக்குத் தண்ணீர் எடுத்துச் செல்லுகையில் சொல்லும் பாட்டு.]

(1)

ஆவோ, ஐயாவோ,
கொண்டான் கொண்டான் நெல்லுக்குத்தி
கொழக்கட்டை மேலே சோருக்கி,
மாங்குளத்துத் தண்ணியிலே
மயங்கருளாம் மாரியாத்தா;
அல்லித் துறையிலே அழகான மூக்குத்தி
வெச்சு மறந்தாளாம், மாரியாத்தா;
பார்த்தவங்க குடுத்துடுங்க; கேட்டவங்க குடுத்துடுங்க;
பசுவை வித்துப் பணந்தாரேன்; எருமை வித்துப்
பணந்தாரேன்.
ஆவோ, ஐயாவோ!

(2)

ஒருகாசாங் கருகுமணி, கழுத்துரொம்பப் பூட்டிக்
கழுத்துரெண்டும் தெறிக்குதடி, கண்ணனூரு மாரி!
ரெண்டொழக்காங் கருகுமணி, கழுத்து ரொம்பப்
பூட்டிக்
கழுத்துரெண்டும் தெறிக்குதடி, கண்ணனூரு மாரி!

(3)

ஆதிபரஞ் சோதி, அழகுமுத்து மாரி,
ஆவாரங் காட்டிலே தாவாரங் கட்டப்போயி
தாவாரம் பத்தாமல் தவிக்கிருளாம் மாரியாத்தா;
ஆலாஞ் செறுவில் ஆனைவந்து மேயுதுன்னு
ஆனை விலைமதிக்கப் புறப்பட்டாளாம் மாரியாத்தா;
பூலாஞ் செறுவிலே புலிவந்து மேயுதுன்னு
புலியை விலைமதிக்கப் புறப்பட்டாளாம் மாரியாத்தா;
அல்லித் துறையிலே புல்லுச் செதுக்கப்போய்
அழகான மூக்குத்தியை வெச்சு மறந்தாளாம்;
பாத்தவங்க குடுத்திடுங்க; பழனிச்சீமை மூக்குத்தி;
கண்டவங்க குடுத்திடுங்க, கண்டிச்சீமை மூக்குத்தி;
பாத்தவங்க குடுத்துடுங்க; பசுவை வித்துப்
பணந்தாரேன்:
கண்டவங்க குடுத்துடுங்க; பன்னிகுத்திப்
பணந்தாரேன்.

(4)

உச்சி மலைமேலே ஊமத்தம் பூப்போலே
பச்சைக் கிளிபோலே பறக்கிருளாம் மாரியாத்தா;
ஆதிபரஞ் சோதி, அழகுமுத்து மாரி,
கண்ணனூரு மேடையிலே பள்ளிகொண்ட தாயி.
எல்லாரும் போறவழி கல்லும் கறடும்;
மாரியாத்தா போறவழி தேரும் திருநாளும்.
ஓடையை வெட்டி ஒதுங்கவிட்டு
ஓடற தண்ணியிலே அணைபோட்டுச்
சட்டம் செலுத்தியே மகமாயி
சவாரி வாறதைப் பாருங்கடி.
ஒண்ணும் கரகமடி, எங்ககண்ணனூராளுக்கு;
ஏகாந்த மாரி, ஆங்காரரூபி,
அசைஞ்சாடும் பொன்கரகம், நம்பபரஞ் சோதி,
ரெண்டாங் கரகமடி எங்ககண்ணனூராளுக்கு.
[இப்படியே பத்துவரையில் வரும்.]

# மாயூரம் அபயாம்பிகை துதி

(பல்லவி)

மயிலாடு துறைவாழும் மகராஜி அவயாம்பா
மலரடி நினைமனமே!

(அநுபல்லவி)

கயிலை தனில்முன்னாள் கர்த்தன் உரைத்தபடி
மயிலாய்ப்பூ ஜித்துவந்து மனத்தில்தி யானித்த (மயி)

(சரணம்)

அன்பாய் அருள்செய்ய ஆவலொடு துலாஇரவில்
அன்பாகக் காவேரி அதனைநாடி வருகின்றேன்.
என்பிறப்பு நீங்கிடவே வந்துதான் அருள்செய்வாய்.
வனமாலி இந்த்ரபுரி வாசன் சோதரியாம். (மயி)

# மீனலோசனி துதி

மீனலோசனசிந் தாமணியேபாதம்
விரும்பினேன் மனோன் மணியே,
த்யான கல்பதரு வாகிய சங்கரி
தாஸ சங்கரி! (மீன)

1. த்யானு னந்த ப்ரவர்த்தகக் கதம்ப வனம்நிறைந்த
வானோர் புகழும் உமையே, மலயத்வஜன் தனயே!
(மீன)

2. திரஸ்வர்ண நதிப்ர வாக, திவ்ய உத்ஸவ ஸதனே,
வாரசக்ர தினப்ரஸாத, மனமஞ்சுள வதனே,
தாரண த்யானஸமாதி சகளநிஷ்கள புவனே,
காரண காரிய உதாரி, கந்தனைப் பெற்றகரு மாரி,
சாரஸ லோசனர் ஸோதரி, சந்த்ர சேகர சுந்தரி!
(மீன)

3. சோமசூரிய நயனப்ரியே, ஸுக கராங்க ஸோபே,
வாம பாகமளித்தோன்னத பானு கோடிப் பிரபவே,
சாமசுந்தர ஸர்வாங்க சௌந்தர்ய விபவே,
பாமரஜன துர்லபே, பக்தஜன ஸுலபே. (மீன)

4. வீசும் கிருபையில் மிகச்சிறந்த மீனும்புஜ நயனே,
வாசமல்லிகை சுகந்தாதி மருஜம்பக வேணி,
பாசாங்குச கடிதடாங்க பதபுஸ்தக பாணி,
ஸாச்வதசுக தாயினி, ஸதானந்த ரூபிணி! (மீன).

5. ..........
..........
ஸத்மன ரிதரணி த்யாகசுந்த ரேசதேவி! (மீன)

# மீனாட்சி

1. சாம ளாங்கரூபி யான சரஸ பூஷணி;
மாமகளாய் வந்துதித்த மஞ்சு பாஷிணி!

2. மாமதுரா புரியில் வாழும் மந்த ஹாஸியே;
தேவர்மூவர் யாவர் போற்றும் சித்வி லாஸியே!

3. அஷ்ட திக்கும் விஜயம் செய்து ஜயித்த நாரியே;
துஷ்டமகி ஷாசுரனை வதைத்த சூரியே!

4. தாகமாக வந்துன்பாதம் தஞ்சமென் றேனே;
நாகலக்ஷ்மி நானும்உன்னை நாடிநின் றேனே.

# மீனாட்சியம்மன் சந்நிதி

நாலு கரண்டி நல்லெண்ணெய்
நாற்பத் தாறு தீவட்டி
ஓரையா சுப்பையா
தெப்பக் குளத்திலே தலைமுழுகி
தேவடியாள் வீட்டிலே பொட்டுவச்சுக்
கொட்டைப் பாக்குச் சீவடி;
கொழுந்து வெத்தலை மடியடி;
மீனாட்சி அம்மன் சந்நிதிக்குப் போகணும்.

# முத்தாள ஆயி

1. வெள்ளிமுக்காலி மேல்இருந்து—ராஜாத்தி
வெந்நீர் வெச்சுத் தலைமுழுகி
வேர்த்து வாருளாம் முத்தாள ஆயிக்கு
வெள்ளிக் குஞ்சம்வச்சு வீசுங்கடி.

2. தங்கமுக்காலி மேல்இருந்து—ராஜாத்தி
தைலம் தேச்சுத் தலைமுழுகித்
தவிச்சு வாருளாம்; முத்தாள ஆயிக்குத்
தங்கக் குஞ்சம்வச்சு வீசுங்கடி.

3. வீதியை வீதியைக் கூட்டுங்கடி;—நல்ல
வெத்தலைத் தோரணம் கட்டுங்கடி;
படர்ந்த வெத்தலையை மடிச்சுப் போடுவா,
பாண்டியன் தங்கச்சி முத்தாள ஆயி.

# லக்ஷ்மி வருக!

(பல்லவி)

வருவாய் லக்ஷ்மி, தாயே,—என் கிருகந்தனில்
மகிழ்வாகவே நீயே.

(அநுபல்லவி)

வருவாய்என் றனக்கருள் திருவாய் மலர்ந்துவரம்
தருவாய்,புத்ர பாக்யம் பெறுவாய்என் றருள்தர (வரு)

(சரணங்கள்)

1. தாயே, இங்குவந் துதிப்பாய்;—எந்நாளும்
சலியாமல் இங்கே இருப்பாய்.
தூயே,உன் பாதமேயன்றி– வேறில்லை;
மாயவன் தேவி, தீர்க்க மாங்கல்ய வரந்தர
(வரு)

2. ஸ்ரீஹரி ப்ரியநாயகி,—எனதுகலி
தீர்த்தருள் பக்த நாயகி,
சாக ரத்தில்உதித்த சக்தி, தயாபரி,
தஞ்சமென்று நம்பினேன்; அஞ்சலென்
றருள்தர. (வரு)

3. கதியென்று நம்பினேனே;—உன்றனை நானே;
கருணை பொழியத் தானே,
ததியிது சொன்னேன்இத் தாஸன்
தமிழ்க்கிரங்கிச்
சந்தோஷ மாய்க்கொடுக்க இந்தாவந்
தேனென்று. (வரு)

# வரலக்ஷ்மி துதி

(1)

1. வரலக்ஷ்மி யானநீ அஷ்டமா தாக்களுடன்
வரிசையாக வேவந்து எங்கள்கிருகத்தில்
திரமான வாழைகள் தோரணம் கட்டிய
திவ்யசபை வரவே ணும், தீனரக்ஷகி.
(ஜயமங்களம்)

2. ஆசனப் பலகையில் மாக்கோலங் கள்இட்டு
அழகுபிச் சோலைமணி கருகுமணிகள்
வாசனை வஸ்துவுடன் அலங்கரித்த கலசத்தில்
வந்தெழுந் தருளுமம்மா, வாரிஜாக்ஷி! (ஜய)

3. நாகசுரம் தவில்தாளம் பேரிநக ராக்களை
நலமாகச் சங்கத்துடன் கோஷிக்கின்ற
நாகரிக மானவீணை பிடில்சர பத்தை
நயமாக வாசிக்கிருள் நீரஜாக்ஷி! (ஜய)

4. குங்குமம்ஜவ் வாதுமஞ்சள் பாதங்க ளில்பூசிக்
குச்சிலிப் பொட்டுமிட்டுச் சந்தனங்களைச்
சங்குக்கண் டந்தனில் கந்தமலர் ஹாரத்தைக்
சிரத்தையாய்ச் சாத்துகிறேன், சர்வசாக்ஷி! (ஜய)

5. மல்லிகை கஸ்தூரி முல்லைமரு வெட்டிவேர்
மருக்கொழுந்து சம்பங்கி ஜாதிமலரை
அல்லும் பகலுமுன் றன் பாதங்க ளில்பணிந்து
அர்ச்சனைகள் செய்குவேன் அம்புஜாக்ஷி! (ஜய)

6. தீபங்கள் தூபங்கள் ஊதுவத்தி ஹாரத்திகள்
திவ்யபல பட்சியதாம் பூலம்தந்தோம்.
பாபங்களைத்தீர்த்துப் பக்தர்கள் யாவரையும்
பாலிக்க வேணுமம்மா, பங்கஜாக்ஷி! (ஜய)

7. சந்தான சம்பத்தும் சகலபாக்யங்களும்
சந்தோஷ கரமாக எங்களுக்கு
இந்தாளன் றளித்துநீ இரக்கமுடன் ரட்சிப்பாய்,
ஈசுவரி, கஞ்ச தளாயதாக்ஷி! (ஜய)

8. தங்கமயக் கிண்ணத்தில் க்ஷீரான்னங் கள்எடுத்துத்
தருணத்தில் பாலருக் கெடுத்து ஊட்டி
அங்குவந்த பேர்களுக்குத் தங்குதடை இல்லாமல்
அமுதளிக்க வரமருள்வாய், அம்புஜாக்ஷி! (ஜய)

9. அலங்காரக் கன்னிகா தானங்களைச்செய்து
அன்புடன் சம்பந்தி மார்கள்மனசு
கலங்காமல் வஸ்த்ரபூஷணங்களை அளிக்கவும்
கருணையுடன் காக்கவேணும், கமலாக்ஷியே! (ஜய)

10. சாவேரி தாஸன்பாடச் சந்தோஷ கரமாகப்
பூவேறு சனகாதி யோகிகளும்
மாவேறி முதலோர் மகிழ்ந்துன்னைத் துதிசெய்யக்
காவேரி எப்போதும் கண்டுகொண் டாட. (ஜய)

11. எந்நாளும் காக்கவென்று பக்தர்கள் கொண்டாட
ஏகாசனத்தில்வந்து விளங்கும் தாயே,
புன்னுக வராளியில் தினந்தோறும் தாஸன்அன்பாய்ப்
பூரித்து ஸந்நிதியில் போற்றிப் பாட. (ஜய)

(2)

(பல்லவி)

பரதேவி திருப்பாற்கடல் வந்த
தீர்க்க லோசனி!

(சரணங்கள்)

1. ஹ்ரிமோகினி, வரதாயினி, ஸகலலோக ஜனனி,
புராதனி, பரமானந்தி, எனதம்பிகை,
பக்தப்ரியே, புண்யாத்ம ரூபிணி, பரிபாலனம்
அருள்வாயே; பங்கஜந்தனில் வளர்ந்தாயே;
கரிநாயக நடையாளே, கஞ்சநாபன் மனையாளே! (பர)

2. அஷ்டதிக்கும் சிறந்துவிளங்கும்
அருட்ப்ரகாச லக்ஷ்மி,
அருந்தவ முனிவர் தேடும்
ஆத்ம ஞான லக்ஷ்மி
இட்டமான அன்பர்தமக்கு
இரங்கும் ஆனந்த லக்ஷ்மி,
இந்திரன் முதலான தேவர்க்கும்
இசைந்த பாக்ய லக்ஷ்மி
அஷ்ட திக்கும் வீர லக்ஷ்மி
அருட்ப்ரகாச மான லக்ஷ்மி
மகாதேச தேச லக்ஷ்மி,
மகாபாக்ய வரலக்ஷ்மி!

———

# வாணி துதி

வந்தனம் கிரகிக்க வேணும்;—வாணியே என்றன்
வந்தனம் கிரகிக்க வேணும்.

1. வந்தனம் கிரகிக்க வேணும்; சிந்தையில் பஜனம்
வேணும்;
பந்தம் தொலைய வேணும்; சந்ததம் மனசினில்
(வந்தனம்)

2. பக்தி ரஸம்உருகப் பாடுமெட் டும்பெருக
அவித்தை வினைகருகத் தானே வரம்தருக (வந்தனம்)

3. சித்தமீ தில்ஜனித்த குத்தம் மிகப்பொறுத்துத்
தத்வ ரஸகடாத்தை என்றன் மனசில் வைத்து
(வந்தனம்)

4. கோரபவ ரோகத்தை வேருடனேபறித்து
ராகாதிகள் ஆகிற ரோகந் தனைவிடுத்து (வந்தனம்)

# இந்த ராமசந்திரர்

(பல்லவி)

இந்தராம சந்திரர் தாமோடி?
பெண்ணே, அடி கண்ணே! (இந்த)

(சரணங்கள்)

1. விந்தையுடன் கௌஸல்யை தவத்தில்வந்த பாலரடி;
மந்தஹாஸ லோலரடி; மன்மதச் சாயலரடி; பூ
மண்டலம் தன்னிலே வந்து பிறந்தாரடி;
மன்னர் தசரதர் புத்திர ராமனடி;—அவரைக்
கண்டுநாம் இப்போ பணிந்திடு வோம்வாடி;
காமன்முக சோமன்ரகு ராமன்புஜ பீமன் (இந்த)

2. அன்றுதச ரதர்யாகந் தன்னில் வந்த
அற்புத ராமச் சந்த்ரரடி;
சென்று தாடகை வதம் செய்தகல்யை
சாப வலையைத் தீர்த்தாரடி;
பின்புமிதி லையில்சென்று அந்தச் சங்கரர்
வில்லை முறித்துநின் றாரடி;
அன்னை ஜானகியாள் தன்னை மணம்செய்து
ஆனந்தம் கொண்டாரடி;
காணலக்ஷம் கண்போதுமோ ராமரைக்
கண்டு சேவித்துக் களித்து மகிழ்ந்திட
வானுல களந்த நாதர் இவரடி;
வந்தனம் செய்துநாம் சிந்தை மகிழ்கொண்டு (இந்த)

3. ஈரே ழுலகுக்கும் நாயகன் நானென்று
இக்ஷ்வாகு குலத்தில் வந்தாரடி;
கானகம் சென்று காய்கிழங் குதின்று
கரதூஷ ணுளையும் வென்ருரடி;
வானரர்க் கிடர்செய்த வாலியைக் கொன்று
சுக்ரீ வர்க்குமுடி தரித்தாரடி;
வானரர் அணைசெய்ய லங்கை தனிற்சென்று
ராவண னையும் வென்ருரடி;
தாமுள் ளளவும் விபீஷ ணர்க்குச்
சிரஞ்சீவி அளித்து முடியும் தரித்து
ஜானகி யாள்தனை மீட்டு க்ஷணந்தனில்
அயோத்தி யினில்வந்து அபிஷேகம் கொண்டவர்.
(இந்த)

. — ..

# இராமர் ஊசற்பாட்டு

1. சீரான பொற்பலகை திகழக் கோத்துச்
செம்பவளக் கால்நான்கு சேர நாட்டி
ஏரான வயிரச்சங் கிலியும் தூக்கி
ஏற்றமர கதக்கொடுங்கை இணக்கிப் பூட்டி
நேரான நவரத்னம் இழைத்த பீடம்
நிகரில்முத் துத்தொங்கல் நிறைந்த ஊசல்
பேரான ஜானகியாள் பிணையாய்க் கூடப்
பெருமையுறு ஸ்ரீராமர் ஆடிர் ஊஞ்சல்.

2. தேவர்முதல் விஞ்சையர்கள் தெளியாழ் வல்லோர்
திரளாக வந்துஜய விஜய என்ன
பாவில்திரு வாய்மொழியைப் பலருங்கூடிப்
பாவையர்கள் குழுமிமனம் களிக்கப் பண்ணக்
காவிக்கலைத் துறவர்மனம் கனிந்து போற்றக்
களங்கமிலா அடியர்குழாம் கலந்து துன்னத்
தேவிஜா னகியணங்கைச் சிறப்பாய்க் கூடித்
திகழும்தச ரதராமர் ஆடி ரூஞ்சல்,

3. சங்கீத வாத்தியங்கள் தழங்க வேத
சாமகா னமுமெய்யர் தழைக்க ஓத
இங்கிதமாய்க் கணிகையரும் ஏற்பாய்ப் பாவ
இராகதா ளங்களுடன் இசைய நாதம்
எங்கணும்பே ரொலிகேட்க இனிதாய் ஆடி
இன்பமாய் லாலிஎச் சரிக்கை பேச,
மங்களமாய் ஜானகியை மணமாய்க் கூடி
மனமகிழும் ஸ்ரீராமர் ஆடிர் ஊஞ்சல்,

# உறங்கலாமா?

1. அரங்க மாநகர் வாசா—என்னை
இரங்கியே ரக்ஷித்தி டாமல்
உறங்கிடவும் நியாயம் உண்டோ?
உத்தமா, மனசு
இரங்கி யேப்ருந்தை மேல்வைத்த பித்தமா?

2. பாம்பணைமேல் பள்ளிகொள்ளும் பரந்தாமா,
என்னிடத்தில்
வீம்புசெய்தால் வேறுதுணை யாரையா?—ஏழை
தேம்பி டாமல் தினமும்வந்து சேரையா.

3. பானுவும் ஒளியும்போல் பத்மமும் சுகந்த மும்போல்
நானும்நீயும் ஏகமாக எண்ணிடாய்.
நாடெங்கும் அதிசயிக்கப் பண்ணிடாய்.

# ஸ்ரீரங்கநாயகி கதவு திறக்கும் பாட்டு

1. ஸ்ரீரங்க நாயகியே, தேவியே, மகிழ்வுடன்
செம்பொன் கதவைத்திற, பெண்ணே,—உன்மேல்
அன்புடன் இங்குவந்தேன், கண்ணே!

2. கண்ணே, மணியேஎன்று கதவைத் தட்டிநின்று
காதலுடன் அழைப்போர் ஆரடி?—சகி,
கடுகி விரட்டிவந்து சேரடி.

3. அதட்டிவந்து சேரென்று அறியாமல் பேசுகிறுய்;
அருளும்ஸ்ரீ ரங்கமன்னன் நானடி;—உனக்கு
அழகிய மலர்கொணர்ந் தேனடி.

4. அழகிய மலர்கொண்டு அர்த்த நிசியில்சென்று
அந்தரங்கம் உள்ளோர்க்கு நீரும்—வெகு
ஆசையுடன்கொடுத்து வாரும்.

5. ஆசை உடையவள்நீ; அன்புடை யவளும்நீ;
அந்தரங்கக் கண்மணி நீயே;—இங்கு
வந்து கதவைத்திற வாயே.

6. கதவைத் திறக்கஇங்கே காரியம் ஒன்றும்இல்லை;
காத லுடன்உறையூர் நேரே—சென்று
கமலவல் லிக்குக்கொடுப் பீரே.

7. கமலவல்லி என்னும்பேர் காதிலும் கேட்டதில்லை;
கண்டதும் இல்லையடி, நானே;—உறையூர்
சென்றதும் இல்லையடி, தேனே!

8. இல்லைஎன் றென்றனிடம் ஏருமல் பொய்யுரைக்கும்
இந்திர ஜாலம்அறி வேனே;—சாமி
தந்திரம் முற்றுமறி வேனே.

# கண்ணன் ஊஞ்சல்

1. ஜோதிமிகும் நவரத்னப் பந்தல் நிழல்
சொகுசுடைய அழகியநல் ஊஞ்சல் மீதே
காதலுடன் ருக்மிணி தேவி கூடக்
கண்ணபிரான், மகிழ்வுடனே ஆடிர்ஊஞ்சல்.

2. அம்பிகையும் வாணியுமோர் வடந்தொட் டாட்ட
அரனுடனே அயன்மகிழ்ந்தோர் வடந்தொட்
டாட்டத்
தும்புருவும் நாரதரும் வீணை மீட்டத்
துதிபெறும்நம் கண்ணபிரான் ஆடி ரூஞ்சல்.

3. அம்பரத்தில் கின்னரர்கள் இசைகள் பாட
அரம்பையுடன் மேனகையும் நடனம் ஆட
இன்பமுடன் கந்தர்வர் கீதம் பாட
யதுநாதன், கண்ணபிரான் ஆடிர் ஊஞ்சல்.

4. சந்திரனும் ரவியும்சா மரைகள் போடச்
சசிபதியும் க்ஷிதிபதியும் கவரி வீச
இந்திரைஸ்ரீ ருக்மிணி தேவிகூட
யதுவீரன் கண்ணபிரான், ஆடிர்ஊஞ்சல்.

# பெருமாள் பாடல்கள்

## எங்கள் பெருமான்

*[ஸ்ரீரங்கம் பெருமாளைக் குறித்த பாட்டு.]*

வெண்கலம் ஆளார், வெள்ளி பூணார்,
எண்ணெய் எரியார் எங்கள் பெருமாள்.

# எட்டெழுத்து

எட்டெழுத்தைச் சொன்ன பேர்க்கு
எந்த வரமும் தருவார்—பெருமாள்
எந்த வரமும் தருவார்.

(வேறு)

(1)

1. மங்கைகோபி மாருடன் கூடிக்
மகிழ்ந்து ஓரிடத்தில் விளையாடித்
தங்கிய சரித்திரத்தைச் சங்கையில் லாமல்உரைக்க
நாடி அருள் தேடி

2. ஆசையாய்ப் பதின்மர் பாதம் போற்றி யதி
ராஜர்அடி இணைமலர் ஏத்தித்
தேசிகராம் வேதாந்த தேசிகர் அடிமலரை
வாழ்த்தித் துதி சாற்றி.

3. தாகமுடன் அடைந்தேன்இப் போதே;—க்ஷீர
சாகரந் தனிலுதித்த மாதே,
நாகசய னத்தில்துயில் மோகனரங் கேசர்மகிழ்
கோதை, அருள் பேதை!

4. பொங்குபுகழ்ப் பொன்னரங்க நாதா, தினம்
லங்கைமன்ன வன்வணங்கும் பாதா,
கங்கையணி சங்கர னும் பங்கய னும் பணிவேத
வேதா, அருள் நாதா!

5. அன்புடனே பரீக்ஷித்து ராஜர் சுகர்
என்பவர்கள் வணங்கிய தேஜர்,
இன்புருகு சிந்தையுடன் எம்பெருமான்
கிருஷ்ணன்கதை
கேட்பார் செவி தாழ்ப்பார்.

(வேறு)

(1)

1. கோடி மன்மதஸ மானரூ பன்கதை
கூறும் மகா முனியே; (கோடி)

2. நாடிஉள் ளந்தனில் நாரண னைமுன்னி
நாடும் சுகமுனியே, கொண்
டாடும் சுகமுனியே! (கோடி)

3. அல்லல்வினை தீரும்; அன்புடனே காரும்;
நல்லவாஸு தேவன் கதை
சொல்லவேணும் இப்போ. (கோடி)

4. கோபியர்கள் கூடிக் கோவிந்தனை நாடிக்
கொண்டாடி அழைத்தலுமே
நன்ருக உரைத்திடுவார். (கோடி)

5. ஓடமதன் மேலே கூடமாதர் பாலே
உண்டான லீலைதன்னைத்
தொண்டான என்றன்முன்னே (கோடி)

(2)

(பல்லவி)

பால கோபாலன் லீலையைக் கேளும்;
பரீக்ஷித்து மகிபாலா!

(அநுபல்லவி)

சீல குணாகர தீரனே, வீரா,
செகத்திற்கனு கூலா, இந்தச்
செகத்திற் கனு கூலா! (பால)

(சரணங்கள்)

1. கோல முடையசிறு பால யுவதியர்
கோபியர்கள் கூடிஓரிடம்
நீல வர்ணனுடை நேசத்தை நாடி
நினைத்துமே கொண்டாடி (பால)

2. கூடி யுகந்தார் கோகுலந் தன்னில்
கும்பல்களாய்ச் சேர்ந்தார் கோபியர்
ஈடில்லை எங்களுக் காருமென் றெண்ணி
எல்லவரும் சேர்ந்தார்; பெண்கள்
எல்லவரும் சேர்ந்தார். (பால)

3. அஞ்சுல க்ஷம்இடை வஞ்சியர் கோபியர்
அனைவரும் கூடிக்கொண்டார்; அன்புடன்
மிஞ்சியே மெச்சித்தம் வடிவழ கினைமிக
மேலென நினைத்து விண்டார்; அழகினை
மேலென நினைத்து விண்டார். (பால)

(3)

(பல்லவி)

கோபியர்தம் கோகுலத்தில் கூட்டம் கூடினர்;
பாவித்தவர் அழகினைக்கொண் டாடிப் பாடினர்!

(அநுபல்லவி)

பாவையரே, என்றனைப்போல் பூவையர்கள் மூவுலகில்
யாவரடி என்றனக்கீ டாவரடி? என்றுரைத்துக்
(கோபி)

(சரணங்கள்)

1. இந்திரை உமைவாணி என்அழ காமோஅடி?
சுந்தரன் பாரியும் எனக்குச் சம்மத மாவாளோ?
இந்திராணி மோகினியும் ஈடில்லாத என்னுடைய
சுந்தரவடிவுக் கீடோ? சொல்லடிஎன் றேஉரைத்துக்
(கோபி)

2. கண்ணன் என்னைக் கண்டுவிட்டால் கலங்குவானடி;—
மணி
வண்ணன்எனைப் பார்த்துவிட்டால் மயங்குவானடி;
வெண்ணெய்தந்தால் என்னிடத்தில் வேணவிச்
வாசமடி;
உண்மையுள்ள பிரீதியடி; உறுதியடி என்றுரைத்துக்
(கோபி)

3. பச்சைவண்ணன் பக்ஷமென்றன் பங்கடிஎன்பாள்;—
அதி
இச்சைமிக என்னிடத்தில் இருக்கடி என்பாள்.
அச்சுதன்என் அழகைக்கண்டால் ஆசைமிக
அதிகமென்பாள்.
உச்சிதமா என்னைமிக உகப்பனடி என்றுரைத்துக்
(கோபி)

4. கூடித்தங்கள் அழகினைக்கொண் டாடும்பெண்
களைக்கூவி
மேடியுள்ள கோபியொருத்தி மேலும் புகழ்வாளே.
போடி, போடி, கண்ணன்நம்மை நாடிஒரு நாளாகிலும்
வாடிஎன்று வலுவில்நம்மை வந்தழைத்தா
னேஎன்றாள். (கோபி)

(4)

(பல்லவி)

வந்தொருநாள் அழைத்ததுண்டோ? வலுவில்
கண்ணன்
வந்தொருநாள் அழைத்ததுண்டோ?

(சரணங்கள்)

1. அந்தரங்க ப்ரீதிகொண்டு சுந்தர வடிவைக் கண்டு
சிந்தையினில் மையல் கொண்டு—சேரஎண்ணி
(வந்தொரு)

2. என்னடி கண்ணனைமிக இச்சையென் றுரைக்கிறீரே.
இன்னமொரு நாளேனும் மோகம்கொண்டு
(வந்தொரு)

3. காதலுடன் யான்ஒருநாள் கண்ணனை
அழைக்காவிட்டால்
தூதியுட னேபுணர்ந்தான்—அதன்றி நம்மை
(வந்தொரு)

4. என்னைவர ஜாடைகாட்டி இன்னொருத்தி தன்னைக்
கூட்டி
உன்னைஅழைத் திருட்டில்விட்டு ஓடினதன்றி
(வந்தொரு)

5. இத்தனைபேர் நமக்குள்ளே ஒத்தருக்கும் மெய்ய
   னில்லை;
மெத்தப்ரீதி என்றுரைத்திர்; மேகவண்ணன்
(வந்தொரு)

6. ஆசைகொண்டு கண்ணன்இனி அன்புடன் அழைக்கா
   விட்டால்
நேசித்தினிப் போகவேண்டாம்; கண்ணனிடம்
(வந்தொரு)

7. இந்தப்படி பேசியந்தச் சுந்தரியர் போனபின்பு
நந்தகோ பாலனப்போ இதை அறிந்தோர்
விந்தைசெய்தான் கேளுமையா, பரீக்ஷித்தனே!

(5)

1. ஆயர் சேரியர் அறிந்தி டாமலும்
   அன்னை தந்தையர் தெரிந்தி டாமலும்
நேய கோபியர் நெஞ்சம் கவர்ந்திட
   மாய வன்குழல் கொண்டூதினன்.—பவள
   வாய வன்குழல் கொண்டூதினன்.

2. சிறுவிரல்கள் குழலைத் தழுவிடத்
   செங்கமலக் கண்கள் சாய்ந்திடக்
குறுவியர்க்கப் புருவம் நெளிந்திடக்
   கோவலன்குழல் கொண்டூதினன்;—அதி
   பாவலன்குழல் கொண்டூதினன்.

3. சுருண் டுருண்டு குழல்கள் அசைந்திடச்
   சுந்தரமுகம் துலங்கிட
மருண்டு மானினம் மேய்கை மறந்திட
   மாதவன்குழல் கொண்டூதினன்;—எங்கள்
   யாதவன்குழல் கொண்டூதினன்.

4. பறவை கூடுவிட் டோடிப் பறந்திடப்
பாம்பு புற்றுவிட் டாடிடக்
கறவை கன்றினம் மேய்கை மறந்திடக்
கண்ணன் குழல்எடுத் தூதினன்;—மணி
வண்ணன் குழல்எடுத் தூதினன்.

5. அம்ப ரந்தனில் கிம்புரு டர்கூடத்
தும்புருவும் கீதம் துறந்திட
ரம்பை ஊர்வசி ஆடல் மறந்திட
எம்பிரான்குழல் ஊதினன்;—தேவர்
தம்பி ரான்குழல் ஊதினன்.

6. கோவிந் தன்குழற் கீத நாதம்அக்
கோபி யர்செவி கேட்டிட
ஆவல்கொண்டவர் தேகம் மறந்திட
மோகம் கொண்டு வேக மாய்வரக்
கானம்செய்கிறுன்;—கண்ணன்வேறு
கானம் செய்கிறுன்.

(6)

(பல்லவி)

சிங்காரம் செய்துகொண்டு
சீக்கிரம் வரார் சிலகோபி.

(அநுபல்லவி)

பங்கயக் கண்ணனைப் பார்த்திட எண்ணியே
மங்கையர் கள்கூடி மகிழ்வுடன் ஓடி (சிங்காரம்)

(சரணங்கள்)

1. காலில் இடும்நகை காதில் இட்டார்;
பீலியை மூக்கினில் வாங்கி இட்டார்;
தாலியைத் தம்முழங் காலில் மாட்டிக்
கோலியே வேகமாய்க் கண்ணனிடம் (சிங்காரம்)

2. பட்டாடை தன்னைக் கழுத்தில் கட்டிப்
பாங்குடன் ரவிக்கையை இடுப்பில் சுற்றி
ஒட்டியா ணத்தைத் தலையில் மாட்டி
ஓடியே வாரார்சில கோபியர் (சிங்காரம்)

3. ஜாடையாய்க் கண்ணன் குழலோ சைசில
சௌந்தரி கேட்டே மெய்ம்மறந்து
ஆடை அவிழ்ந்ததை அறியா மல்வெகு
அவசர மாய்வரார் சிலகோபியர். (சிங்காரம்)

4. கோவிந் தன்குழல் நாதம் அந்தக்
கோபியர் கேட்டுடன் மெய்ம்மறந்து
ஆவலாய் எதிர்ந்திடும் ஆளனை மிரட்டிக்
காவல் கடந்து வரார்சில கோபியர். (சிங்காரம்)

5. கருமுகில் வண்ணன் குழலோசைதனைக்
காதினிற் கேட்டு மோகமதாய்
அருமையாய்ப் பெற்ற மைந்தனை எறிந்து
அலங்கோல மாய்வராள் ஒருகோபி. (சிங்கார)

6. மாதவன் கீதவலையினிலே மதிமயங்கிய கோபி அந்த
மாதராள் கண் ணுக்கு வழிதெரி யாமல்
மதிலேறி விழுவாள் ஒரு கோபி. (சிங்கார)

7. கோபியர் அனைவரும் கூடிக்கொண்டார்;
கும்பல்களாய் ஒன்று சேர்ந்துகொண்டார்;
கோவிந்தனைமிகத் தேடிக்கொண் டெல்லோரும்
கூப்பிட்டு வாரார் யமுனைக்கரை. (சிங்கார)

8. யமுனாநதியின் கரைமேலே இருக்கும் சோலை
மலைக்குகைகள்
எங்கிலும் தேடிக் கண்ணனைக் காணாமல்
ஏங்கி எல்லோருமாய்த் தேடுகிறார். (சிங்கார)

(7)

(பல்லவி)

மங்கையரே, காணேனடி மதனகோ பாலன்
மாதர்கள் லோலன்.

(சரணங்கள்)

1. பங்கயம்போல் கண்ணனடி, பச்சைநிற வண்ணனடி,
துங்கருக்குள் எண்ணனடி,
துரையென் கோபாலன்,
நிறைகுண சீலன். (மங்கையரே)

2. கண்ணன்மணி வண்ணனடி, காட்சியுள்ள ரூபனடி,
எண்ணனடி, இன்பனடி,
ராஜகோ பாலன்
நேசர்கள் லோலன். (மங்கை)

3. வெண்ணெயுண்ட வாயனடி, மண்ணை யுண்ட
மாயனடி,
விண்ணவர்கள் நேயனடி,
விஜயகோ பாலனடி,
விஜயன் தோழன்.

4. கோகுலத்தில் வாசனடி, கோபியர்கள் நேசனடி,
ஆகுலங்கள் தீர்ப்பானடி,
ஆசைக் கோபாலன்
தாஸர்கள் லோலன்.

(8)

1. மதனகோ பாலனைத் தேடி—கோபி
மங்கையர் காணுமல் வாடி
மதனன் பாணம் மனத்தைக் கவர
மாதர்கள் மையல்கொண் டோடிவந்தார்.

2. கோகு லத்தினில் இருப்பானே?—நாம்
கோரும் சுகங்கள் கொடுப்பானே?
வாரிஜ நாபனைக் காண்போ மான்று
கோரியே கோகுலம் ஓடிவந்தார்.

3. பாலகோ பாலன் கண்ணனைப் போல்சில
பாலக ருடனேபந் தாடிக்
கோல முடன்எதிர் கூவி வரும்அந்தக்
கோபிய ரைக்கொண்டு உள் நுழைந்தார்.

4. இருகை நிறைய அமுதமடி
எங்கிலும் சிதற வாரிக்கொண்டார்;
தெருவில் கூவிடும் நாவல் பழம்வாங்கக்
தேவகி சேயரும் ஓடி வந்தார்.

5. சுந்தர மதிமுகம் அதிலே
சுருண்டி ருண்டகுழல் அசைய
நந்த னருமைக் குமரன்அப்போ
நாவல் பழம்கூவி வீதிவந்தான்.

6. தண்டை சிலம்புகள் சத்தமிடத்
தாமரை முகத்தில் வேர்வையிட
கொண்டல்வண்ணன்வரக் கண்ட வுடன்அந்தக்
கோபியர்கள் மிக்க ஆவலுடன்

7. கண்ணனைச் சுற்றி வளைத்துக் கொண்டார்—தம்
காதலை மிக்கு வியந்துகொண்டார்; மணி
வண்ணனை மாதர்கள் ஜாடைகள் காட்டி
மறைவாக நின்றப்போ கோருகிறார்.

(9)

[இங்கிலீஷ் நோட்டு]

(பல்லவி)

கமல நயன கமல வதன கமலசரணு வாவா.

(சரணங்கள்)

1. கமல நாபா, வா, கமலை நாதா, வா,
கம்ஸ மர்த்தனு, காளிங்க நர்த்தனு,
கோகுல வர்த்தனு, கோவர்த்த னோத்தனு,
வா வா. (கமல)

2. நந்த குமாரனே, வா, நவநீத சோரனே வா,
கந்தர்ப்ப னைப்பெற்ற தந்தை யெனஉற்ற
உன்றனை யேபற்ற வந்தடைந்தோம் முற்ற
வா வா. (கமல)

3. தேவகி பாலனே வா, தேவாநு கூலனே வா,
தேவதே வர்துதி தேவர்க்கதிபதி,
தேவி உமாபதி மேவித் தொழும் நிதி,
வா வா.

4. கண்ணே, உருகுகிறோம் வா; வெண்ணெய் தருகிறோம் வா;
தண்ணந் துழாயணி கண்ணனே, என்மணி
வண்ண னெனப்பணி பெண்ணின் அருமணி,
வா வா.

(10)

(பல்லவி)

தேடி நீங்கள் இங்குவந் தழைக்கிறீர்;
இந்த வேளையி லுங்கள் சிந்தை கலங்கி என்ன?

அநுபல்லவி)

பாதியாட் டந்தன்னில் பழம்வாங்க வந்தான் என்னோடு
காதல்விண்டு என்னைக் கண்டு சூழ்ந்துகொண்டு
(தேடி)

(சரணங்கள்)

1. உத்தம கோபியரே, பர்த்தாவை விட்டுவர லாமோ?
மற்ருெரு புருஷனை மனத்தில் நினைத்திடவும் போமோ?
சித்தஜன் பாணத்தில் சிக்கினேம் என்றுநீங்கள்
இத்தனை பேரும்பெரும் பித்துப் பிடித்தவர் போல்
(தேடி)

2. கோபியரே, உங்களோடு கூடிநான் பேசுவதைக்
கண்டால்
கோபித்து அன்னை அசோதை அடிப்பாளென்னைக்
கண்டால்
மேவிஎன்னை நீங்களும் கூவிக் கணவன் போலப்
பாவித் தழைத்தீரே! பாவ முங்கட் கல்லவோ?
(தேடி)

3. இந்து வதனமதி சுந்தர வதிநீர் கூடி
வந்து மருவவென்று வலிய அழைக்கலாகு மோடி?
சொந்தபந் துக்களுடன் உங்கள் கணவர்முதல்
தந்தைநந்தர் அறிந்தால் நிந்தைக் கிடமாகுமே!
(தேடி)

4. வெண்ணெய் தயிர்பால்எங்கள் வீட்டினிற்
கிடையாதோ?
அண்ண னுடனேநான் அமுதுசெய்ததை அறியீரோ?
பெண்ணே, நீங்கள் எல்லோரும் உண்மை
அறிவிழந்து
கண்ணுகண்ணு என்று கண்ணைக்காட்டிக் கெஞ்சித்
(தேடி)

(11)

1. கண்ணன் சொன்ன வார்ததை அந்தப்
பெண்மணிகள் கேட்டு முந்த
வண்ணமணி வாய்திறந்து கோருவர்—மணி
வண்ணனே, கதிநீ என்று கூறுவர்.

2. காதல்கொண்டிப் போது வந்த
பேதையான மாதர் கள்மேல்
சூதுசெய்தால் எங்கள்கதி மாதவா,—இந்தப்
போது ஓது கோதிலாத யாதவா!

3. சார ஹீன மானபெருங்
கோரசமு சாரபவ
சாகரங் கடந்துவந்தோர் ஐயனே,—உன்றன்
மோகம தடைந்துனைந்தோம், மெய்யனே.

4. கன்னல் வில்லி மாரன் முன்னே
அன்னிதம்செய் வாயோ என்னை?
உன்னை நம்பி ஓடிவந்தோம், உத்தமா,
இன்னமும்சோ திப்பதுன்றன் சித்தமா?

5. பாம்பின்மேல் நடனம் செய்த
பாலகோ பாலா ஏழைமேல்
வீம்புசெய்தால் வேறுதுணை யார்ஐயா?—ஏழை
தேம்பி டாமல் இனிவந்து காரையா!

6. அஞ்சிக் கெஞ்சிக் கொஞ்சி உன்றன்
தஞ்சமென அஞ்சலிசெய்
வஞ்சியர்மேல் கஞ்சமலர்க் கண்ணனும்—மிக
நெஞ்சிரங்கி னன்மணி வண்ணனும்.

(12)

(பல்லவி)

கோபியர் உரைக்குகந்து கோவிந்தனும்
கூடி யமுனையை நாடி வந்தான்.

(அநுபல்லவி)

பாவித்துப் பாவலர் நாவலர் யாவரும்
மேவித் துதித்திடும் தேவகி பாலனும்
சேவித்துக் கூவிடும் பாவையர் கள்உடன்
கூடியேபண் பாடியேகொண்
டாடியேகூத் தாடியே (கோபி)

(சரணங்கள்)

1. மாங்குயில் கூவிடும் சோலைக ளும்புள்ளி
மானினம் ஓடும்நற் சாலைகளும்
பூங்குயில் பாடிடும் ஓடைக ளும்நல்ல
பொன்மயில் ஆடிடும் மேடைகளும்
பாங்கினுட னேபெண்கள் பாலகிருஷ்ணன்கரம்
பக்திமிகச் தத்தியவங் தத்திமித் தோமென
(மாங்)

2. கூடிஎல் லோரும் யமுனைவந் தார்அதன்
வேடிக்கை கண்டு மிகஉகந்தார்;
கோடிரவிசம கோகுல நாதனை
மேடிய தாக நடுவைத்தப் போதனை
பாடியு சேனியைப் பண்புடன் யமுனை
பார்த்துமிகப் போற்றியதன் நேர்த்தியதைச்
சாற்றியே. (மாங்)

(13)

1. பொங்கும்யமுனா நதிக்கரை மங்கையர் கூடித்
தங்குபெருங் காட்சிதனைத் தனித்தனியே பாடிப்

2. பங்கயங்கள் பூத்திருக்குது பாரடி என்பாள்.
செங்கழுநீர் செழித்திருக்குது பாரடி என்பாள்.

3. அவ்வல்லியில் அன்னம் பெடையோ டாடுதே,
என்பாள்;
செவ்வல்லியில் வண்டுகூடிப் பாடுதே என்பாள்.

4. அலைமோதும் சுழிசுழிக்குது; ஆழம்பார் என்பாள்;
நிலையேததில் மகரமத்ஸ்யம் நிறைந்ததோ? என்பாள்.

5. ஓடிவாடி இங்கேஒரு ஓடங்காண்; என்பாள்;
ஈடில்லை இவ்வோடத்திற் கெங்கும்ரத்னப்
பூணென்பாள்.

6. இந்திரன் விமானமுமிதற் கேற்குமோ? என்பாள்;
இந்திரை உமைவாணியும் இதைப் பார்ப்பாரோ?
என்பாள்.

7. ஜோராக இந்தஓடத்தில்நாம் ஏறுவோம் என்பாள்;
வாராய் சொந்தத் தோழிமார்க்குக் கூறுவோம்
என்பாள்.

(14)

(பல்லவி)

எல்லவரும்கூடி ஏறிடுவோம் வாடி—நாம் (எல்)

(சரணங்கள்)

1. வாடி, வாடி, தோழியரே, கூடி விளையாடி இந்த
நீள்திரைசூழ் ஆடெமுனை நாடியந்தஓடம் முந்த (எல்)

2. துஷ்டன்மிக முரடன்கண்ணன் துன்மார்க்கம்
செய்திடுவான்;
கிருஷ்ணனைநாம் இங்குவிட்டு இக்ஷணமே ஒன்றுபட்டு
(எல்)

3. தாயின்முலைப் பால்இருக்கத் தவிர்ந்துமனம்
வேறுபட்டுப்
பேயின்உயிர் போகஉண்ட பித்தனைநாம் இங்குவிட்டு
(எல்)

4. துள்ளுமிளங் கன்றுகளை மெள்ளஅவிழ்த்
தோட்டிவிட்டு
உள்ளிருந்த பாலுருட்டும் கள்ளனைநாம் இங்குவிட்டு
(எல்)

5. வஞ்சியர்தம் சேலைகளை வாரிமரம் ஏறிவிட்டு
அஞ்சி நம்மைக் கெஞ்சவைத்த வஞ்சகனை இங்குவிட்டு
(எல்)

6. கோவியர்கள் கூறுமொழி கோவிந்தனும்
கேட்டும்அப்போ
பாவித்தவர் பாவனைபோல் பாவையரைப்
பார்த்துரைப்பார். (எல்)
கேளும்மகா ராஜா, கீர்த்தியுள்ள தேஜா!

(15)

(பல்லவி)

உங்களுடன் யானும்வருவேன்—கோபியரே,
உங்களுடன் யானும் வருவேன். (உங்க)

(சரணங்கள்)

1. ஓடமதிலே நாடிமகிழ்வாய்க் கூடி விளையாடி
நீள் திரை சூழ்ந்திடும் ஆடெமுனாநதி வேடிக்கை
பார்த்திருந்து (உங்க)

2. மங்கைமயிலே, பொங்குங்குயிலே, தங்கநிறத் தாளே,
பொங்கிமகிழ்வுடன் தங்கியவ் வோடத்தில் அங்கொரு
மூலையிலே — கோபியரே, (உங்க)

3. அன்னநடையே, மின்னல்கொடியே, துன்னுமிடை
யாளே,
தன்னந் தனியேஇங்கு என்னசெய் வேனடி?
சின்னஞ் சிறிய பாலன் — கோபியரே, (உங்க,

4. பாலின் மொழியே, சேலின் விழியே, நீலநிறத்தாளே,
கோலம் உடையசிறு பாலன்இங் கேதனியே
ஓலமிட்டழுவானே;—கோபியரே. (உங்க)

(16)

1. ஓடமதில் ஏறிஇப்போ உங்களுடன் வேடிக்கையாய்க்
கூடவரேன் என்றுசொன்ன கோவிந்தனைப் பார்த்துப்
பெண்கள்

2. துஷ்டனடா, உன்னை நாங்கள் இஷ்டமதாய் ஓடந்
தன்னில்
கிட்ட வைத்தால் எங்களுக்குக் கேடுசெய்வாய்,
எப்பொழுதும்.

3. முன்னேஎங்கள் சேலேதன்னைப் புன்னையில்
ஒளித்துவிட்டாய்;
பின்னேநடுக் கானகத்தில் பெண்களைத் தவிக்கவிட்
டாய்.

4. அன்னம்கேட்டு யக்ஞபத்னி ஆனநன்மை நீஒழித்தாய்;
துன்னுகுழல் ஊதிஎங்கள் தூயமனத் தைஅழித்தாய்.

5. துள்ளுமிளங் கன்றுகளை மெள்ளவே அவிழ்த்து
வைத்தாய்;
உள்இருந்த பால்உருட்டி ஓடிஎன்னை வந்தழைத்தாய்.

6. அள்ளிவெண்ணெய் தன்னைஎன்றன் அங்கமெல்லாம்
நீதுடைத்தாய்;
துள்ளியோடி மாமியிடம் தூதுசொல்லிக் கோள்
உரைத்தாய்.

7. நாத்தினை முறைவிண்டாய்; நான்அவட்கு
மதனிஎன்றாள்;
பார்த்திருக்க மானபங்கம் பண்ணிஅவள்
சேலேகொண்டாய்.

8. தூர்த்தனடா, உன்னைஎங்கள் இஷ்டமதாய்
ஓடம்தன்னில்
ஏற்றிக்கொண்டால் எங்களுக்கு இடர்செய்வாய்
எப்பொழுதும்.

9. நாடிஇந்த யமுனையிலே வேடிக்கையாய்ப் பெண்கள்
எல்லாம்
மேடியுடன் லீலேசெய்து கூடிவிளை யாடையிலே.

10. ஆடவர்கள் பெண்களுடன் கூடவந்தால் காதறுகும்;
போடா, கண்ணு, உங்கள்வீடு; தேடு வாளுன்
அன்னைஎன்றாள்.

(17)

1. பாலனென்று மனத்தில்எண்ணிக்—கோபியர்கள்
பகர்ந்திடும் வார்த்தை தன்னை
நீலவர்ணன் கேட்டுமப்போ—கோபியரை
நேசித்தொரு வார்த்தை சொல்வான்.

2. என்னடியோ கோபியரே,—என்னைமிக
ஏசிமெத்தப் பேசுகிறீர்;
முன்னம்என்னை நினைத்தவர்க்காய்—நான்செய்ததனை
மொழிகின்றேன்; கேளடியோ.

3. அன்னம்மீனோ டாமை ஆனேன்;—அடியவர்கள்
ஆசைதன்னைத் தீர்த்து வந்தேன்;
பன்னியுடன் சிங்கம் ஆனேன்;—பக்தர்களைப்
பாங்குடனே காத்து வந்தேன்.

4. ஓலமிட்டு யானைஎன்னை—மூலமென
ஓடிக்காத்து வந்தேனடி.
பாலன்த்ருவன் தனக்கிரங்கி—மேலான
பதவியும் தந்தேனடி.

5. கல்லையும்பெண் ஆக்கிவைத்தேன்—மனமிரங்கிக்
காகத்துக்கும் கண்கொடுத்தேன்;
வல்லையெனக் காத்திருந்த—சபரிஎச்சில்
வாங்கிஉண்டு மனம்களித்தேன்.

6. இன்பமுள்ள யமுனாநதி—ஓடந்தன்னில்
என்றனையும் ஏற்றிக்கொண்டால்
துன்பம்வந்து சேர்ந்துவிட்டால் உங்களைஅப்போ
அன்புடனே காத்திடுவேன்.

7. சின்னஞ்சிறு பாலன் அல்லையோ?—உங்களுடன்
சேர்ந்துகூட வரவில்லையோ?
இன்னமும் தயவு வல்லையோ? என்றனை ஓடம்
ஏற்றிடவும் மனமும் இல்லையோ?

8. உங்களுடன் கூடி வந்தயான் - சிறுவன்
பொங்கும்யமுனைக்கரையில்
தங்கியிருப்பதை அறிந்தால் அன்னையசோதை
தண்டித்தென்னை அடித்திடுவாள்.

(18)

கோவிந்தனும் கூறலுமே—கோபியர்
கூடிஒன்றாய் மனம்இசைந்தார்;
ஆவலுடன் கண்ணனையும்—பெண்கள்
அழைத்துப்போய் யமுனைவந்தார்.

(முடுகு)

யமுனா நதிக்கரையில் எல்லோரும் கூடி
அமைவாக அங்கிருக்கும் ஓடத்தை நாடிச்
சேலைதன்னைத் தூக்கிக் கட்டினர் சிலபேர்,
சேர்யமுனை ஓடத்தைக் கிட்டினர் பலபேர்.
கோலெடுத்தே ஓடம் தள்ளினர் சிலபேர்.
கொண்டுவந்து கரைநிறுத்தித் துள்ளினர் பலபேர்.
ஓடத்தில் ஏறிக்கொண் டாடினர் சிலபேர்.
கூடவே கண்ணனை நாடினர் பலபேர்.
ஆவலுடன் ஓடத்தில் கண்ணனைச் சிலபேர்
அன்புடனே ஏற்றிமணி வண்ணனைப் பலபேர்,

பாலகிருஷ்ணு இங்கே பார்என்றார் சிலபேர்.
மூலையில் வந்து உட்கார்என்றார் பலபேர்.
சீலம்செய்தால் இதோஓர் என்றார் சிலபேர்.
சிக்ஷிக்க இதுபெரிய கோலென்றார் பலபேர்.
நாடிநடு யமுனையை நாடினர் சிலபேர்.
ஈடில்லை என்றகம் ஓடினர் பலபேர்.
நானென் றகம்பாவம் நாடினர் சிலபேர்,
ஏனென்போம், ஆரென்று பாடினர் பலபேர்.
அன்னவனை நீஎன்று ஓரென்றார் சிலபேர்.
துன்னும்இவ் வோடம்மிக ஜோரென்றார் பலபேர்.
என்னுடைய பாக்யமிது பார்என்றார் சிலபேர்.
நாடிஅகம் மூடிநடு யமுனை தன்னைத் தேடி
ஈடில்லைஎன் றுடியே ராகம் பாடியே கொண்
டாடிவாரார் ஏலேலோ, ஏலேலோ! (யமுனை)

(19)

1. பாடியே ஓடம்விடும்—பெண்டுகளைச்
பாலகோ பாலனப்போ
நாடிநயத்துடனே—கோபியரை
நாதனும் பார்த்துரைப்பார்.

2. அலையடிக்குதடி,—இவ்விடத்தில்
ஆழம் அதிகமடி;
நிலைஇல் லையடியோ—ஓடந்தன்னை
நேரில் திருப்பும் என்பார்.

3. மச்ச முதலையுடன்—திமிங்கிலம்
மதிக்கும் மடுவடி;
பட்சி மதிப்பினிலே—ஓடந்தன்னைப்
பார்த்துத் தள்ளுமென்பார்.

4. சுற்றிச் சுழலுதடி,—ஓடம்இங்கே
சுழல் அதிகமடி.
அத்திசை திருப்பினால்—உங்களுடை
ஆசைபோல் போகும்என்பார்.

5. ஆசையாய்க் கோல்எடுத்துத்—தள்ளிஇந்த
ஆழத்தில் ஓடம்விட்டால்
மோசம் வருமடி—கோபியரே,
யோசித்துப் பாரும் என்றார்;

6. கோவிந்தன் கூறலுமே—கோபியர்கள்
கூடியே சர்வம்கொண்டார்;
கோபித்துக் கண்ணனைப் பார்த்—தெல்லவரும்
கூப்பிட்டப் போது விண்டார்.

(20)

(பல்லவி)

சரிபோதும், நீயுக்தி புகலுவது
சார சோர கிருஷ்ணா! (சரி)

(அநுபல்லவி)

உறியில் வெண்ணெய் பால்தயிர்
உருட்டிக் கொட்டுவ தைப்போல்
ஓடம்விடுவ தெண்ணினாய் பாலா! (சரி)

(சரணங்கள்)

1. மேட்டிமை யாகவே மெல்லிகோ பியர்கள்போல்
நாட்டும்இவ் வோடந்தன்னை
மாட்டேன்; ஆடுகள் கூட்டம் கூட்டமாகநீ
ஓட்டிமேய்த் ததைப்போலே எண்ணினாய். (சரி)

2. பார்த்து மாதர் எல்லோரும் சேர்த்துத்தள்
ளிடும்இந்தப்
பாங்குள்ள ஓடந்தன்னை
வேர்த்துப் பிடித்தசோதை விம்ம உரலில்கட்ட
சேர்த்திழுத் தோடினாற்போல் எண்ணினாய். (சரி)

3. மெத்த மதியுடைய சித்தி இடையர்கள்ஒரு
மித்தஇவ் வோடந்தன்னை
நத்தைகுத்தும் கொத்தைவா னரத்தின்முன்
தொத்தித் துரத்தினாற்போல் எண்ணினாய். (சரி)

(21)

1. பொங்கும் யமுனாநதியில் மங்கையர்கள் ஓடமதில்
கூடித்
தங்கிநடு ஆறதனில் தாமோதரன் தன்னையவர் நாடி.

2. கையைத்தட்டிக் கண்சிமிட்டிச் செய்கையினால்
ஜாடைமிகக் காட்டிப்
பையனென்ற பாலகிருஷ்ணன் பயப்படுகிறான் பாரடி,
சீமாட்டி.

3. வீடதனைப் பெண்களுடன் வீண்பெருமை பேசுவதில்
   தீரன்;
ஆடவனாய் ஓடமதில் கூடவந்தும் கோலெடுக்கா வீரன்.

4. வெண்ணெய்தயிர் பால்திருடி வயிறுநிறைக்கும்
   சத்வகுண சீலன்;
தண்ணியினில் ஓடத்தைஅவன் தள்ளுவனோ?
   சின்னஞ்சிறு பாலன்.

5. மாட்டுடனே ஆடுமேய்த்து மாதர்கள்மேல்
   சூதுசெய்யும் மாயன்,
ஓட்டுவனோ நம்மைவைத் தோடமதைச் சொந்தமாய்
   ஆயன்?

6. மறைந்திருந்து வில்எடுத்து மர்க்கடத்தின் மார்பிளந்த
   மன்னன்
நிறைந்திருக்கும் ஓடமதை நேசமுடன் தள்ளுவனோசம்
   பன்னன்

7. கெக்கலித்துக் கெர்வம்கொண்டு கேலிபண்ணும்
   கோவியரைக் கண்டார்.
அக்கணமே கண்ணனவ மானம்பண்ண
   மனத்தில் எண்ணம் கொண்டார்.

(22)

(பல்லவி)

மன்னா, மகிழ்ந்து கேளுமே
மாதவன்ஓடத்தில்செய்த லீலைதன்னை (மன்னா)

(சரணங்கள்)

1. மின்னார்கோபி யர்மதத்தை மேகவண்ணன்
நன்ருய் அடக்கஎண்ணியவர் அகத்தை
உன்னி மனத்தோர் இதத்தை உகந்தும் அப்போ
உத்தமன்கோ விந்தனெரு விந்தைசெய்தார். (மன்ன)

2. இந்திரன் தன்னை நினைத்தார்;இவ் வேளையில்;
இருண்டமழை பொழியென் ருக்ஞாபித்தார்
மந்திரத்தால் மறைத்தார் மாயமதாய்:
மாதருக்குப் பாலனைப்போல் லீலைசெய்தார்.

3. அண்டமும் கிடுகிடென்னும்; மேதினி
அதிர்ந்திடும்; கடல்கள் ஓலமிடும்;
எண்டிசைகளும்குலுங்கும்; ஏழு
பருவதங் களும்மிக நடுநடுங்கும். (மன்ன)

4. சப்தசா கரத்திலுள்ள நீரதனை
முற்றக் குடித்தபெரும் காளமேகம்போல்
எத்திசைகளும்இருளும்; எங்கிலும்
இடியுடன் கொடிமின்னல் பரந்துவிழும். (மன்ன)

5. மண்வாரிக் காற்றடிக்கும்; கோபிஅந்த
மங்கையர் கண்ணினை மறைத்தடிக்கும்;
புண்ணாகி மனம்குழையும் ஓடம்
தண்ணீரில் நில்லாமல் தத்தளிக்கும். (மன்ன)

6. அண்டாத மழைபொழியும்; ஆயரிடைப்
பெண்டுகள் தங்களுடை மனம்ஒழியும்;
தண்டாமல் கோலமுழியும் இடம்
தண்ணீரில் நில்லாமல் தலைகவிழும். (மன்ன)

7. எண்ணாத எண்ணமெண்ணி எல்லவரும்
என்னசெய் வோமென்று மனத்தில்எண்ணிப்
பண்ணாத துதிகள்பண்ணிக் கோபியர்கள்
பாங்காய்ப்பல தெய்வத்தைப் பிரார்த்தித்தார்.
(மன்னா)

(23)

1. அல்லோல கல்லோலம் ஆச்சுதிப்போ;
அம்மா யமுனா தேவியரே,
எல்லோரையும் கரைசேர்த்தாய்; நீரில்
எட்டுக் குடம்தேன் விட்டிடுவோம்.

2. எம்பெருமான் கண்ணனுடன்
ஏழைகள் அக்கரை சேர்த்துவிட்டால்
சம்போ, சிவசங்கர னே,உனக்கு
கும்பாபி ஷேகங்கள் பண்ணிவைப்போம்.

3. குழகன்நந்த பாலனுடன் நாங்கள்.
கூடியே அக்கரை சேர்ந்துவிட்டால்
பழனிவாழ் முருகேசா, உனக்குப்
பஞ்சா மிர்தங்களும் பண்ணி வைப்போம்.

4. பாலன்இந்தக் கண்ணனுடன் நாங்கள்
பாவையர் அக்கரை சேர்ந்துவிட்டால்
ஆவடிக் கறுப்பா, மதுரை வீரா, உனக்கு
ஆறுகுடம் கள்ளும்கட்டுக் கரும்பும் வைப்போம்.

5. எல்லைப் பிடாரிபூங் காளி
எங்கள் குலமாரி, ஆங்காரி,
தொல்லையில் லாமல்கரை சேர்த்தால் உனக்குத்
துள்ளுக் குட்டியுடனே மாப்படைப்போம்.

6. நெஞ்சம் குழைந்திந்த வஞ்சியர்கள்
நேசத் துடன்பல தெய்வங்களை
அஞ்சலி செய்துவரம் வேண்டவே,—ஓடத்தோர்
அற்புத மாச்சுது; கேளும் மன்னு!

(24)

1. கண்டகண்டபல தெய்வங்களைக்
கையெடுத்துத்தொழு தேத்தி அப்போ
வேண்டித் துதிக்கையில் ஓடத்திலேஒரு
விந்தைஉண் டாச்சுது; கேளும் மன்னு!

2. நாலுபக்கமும் அலை அடிக்க
ஞாலத்தில்ஓர் யந்திரம் வெடிக்க
நடுவில் பெரிய துவாரம் திறக்க
நங்கையர் கோபிமனம் பறந்தார்அந்த.

3. ஓடமதனில் ஜலம்நிறைய
உத்தமிஆ டைகளும் நனையக்
கூடவந்திருக்கும் கோவிந்தனை வந்து
கோபிய ரப்போ அணைந்து நைந்தார்

4. பங்கயக் கண்ணனே, என்னசெய்வோம்?
மங்கையர் உன்னுடன் மாய்ந்திடவோ?
பொங்கும் யமுனை நடுவினிலேஓடம்
தங்கித் தவிக்குதே; என்னசெய்வோம்!—நாங்கள்.

5. காற்றில் உடல் நடுங்குகிறதே;
கைகால்களும் பதைக்கிறதே;
சேர்ந்திழுக்குதே, ஜலத்தில் ஓடத்தைச்
செங்கனி வாயனே,என்ன செய்வோம் நாங்கள்?

(25)

1. நந்தனருமைப் பாலனே, வந்தனம் செய்வோர்
லோலனே,
உன்றன்சொல்லைக் கேளாமலே இந்தக்கதி
ஆனோம்ஐயா!
ஐயனே, ஐயனே, துய்யனே, மெய்யனே!

2. தோழிய ருடனேகூடி வாழ்வினைஇழந்துவிட
ஆழிவண்ணா, உன்னைக்கூட்டிப் பாழும்யமுனை
நாடியே
வந்தோமே, வந்தோமே, நொந்தோமே, நைந்தோமே.

3. மெத்தவும் தவம்புரிந்த உத்தமியசோதைநொந்து
பெற்றெடுத்த பாலகனைஉன் புத்தியினைக் கேளாமலே
போயினோம், போயினோம்; நாயினம் ஆயினோம்.

4. இத்தருணம் காரும்ஐயா, உற்றவினை தீரும்ஐயா,
இத்தனைபேரும்பிழைக்கும் புத்திசொல்லித்
தாரும்ஐயா!
மாயனே, மாயனே, தூயனே, நேயனே!

5. மங்கையரெல்லோரும் வந்தோம்; சங்கைவினையாலே
நொந்தோம்.
எங்கிலும் கதியன்னியில் உன் பங்கயப்
பதம்அடைந்தோம்.
பாருமே, பாருமே, காருமே, நீருமே.

(26)

1. அஞ்சியே நடுங்கி நெஞ்சம் அடங்கி
வஞ்சியர் ஒடுங்கிக் கஞ்சமலர்க் கண்ணனையே
பெண்களெல்லாம் தஞ்சமென் றடைந்தார் அப்போ.

2. பக்தபரி பாலன், சுத்தரநு கூலன்,
உத்தமியர் லோலன், மெத்தவும் மனம்இரங்கிக்
கோபியர்க்கோர்
யுக்திசொன்னார் கேளும் மன்னா!

3. கோபியரே, பாரீர்; ஆவலுடன் ஓரீர்;
நாவமெங்கும் நீராய் மேவிவரும் துவாரம்உங்கள்
ரவிக்கையினால்
பாவையரே, மூடுமென்றார்.

4. கண்ணனுரை கேட்டார்; உண்மையென்றுட்பட்டார்.
பெண்மணிகள் தொட்டார்; வண்ணவண்ண
ரவிக்கையினுல்—கோபியர்கள்
தண்ணிவரும் வழிஅடைத்தார்.

5. பஞ்சவர்ணக் கோலப் பட்டுடனே நீல
மஞ்சளுடன் சால
ரஞ்சித ரவிக்கைகளால் துவாரமதை
வஞ்சியர்எல்லோரும் மூடினுர்.

6. சங்கையுடன் கூடி மங்கையர்கள் நாடிக்
கொங்கையினை மூடித் தங்கியிருக்கும் ரவிக்கைகொண்
டனைவர்களும்
துவாரமதை மூடலுமே.

(27)

1. ஓடமதில் துவாரமுன்னே மூடப் பெண்கள்
ரவிக்கைதன்னைப்
போடப் போட யமுனைகொண்டு போகிறதைக்
கோபியர்கள்
பார்த்து மிகப்பயந்து பாலகிருஷ்ண னைநயந்து
சேர்த்தணைந்து வியந்து சேவடிதனில் அடைந்து
கண்ணனே, என்னசெய்வோம்? வண்ண
ரவிக்கையெல்லாம்
தண்ணிகொண்டு போகிறதே; தாமோதரா,
காருமென்ருர்.
பாரும் மகிபாலா, பரிக்ஷித் தெனும்சிலா!

2. கேட்டுக் கண்ணன் மனம்துடித்து வாட்டமுள்ளார்
போல்நடித்துக்
கூட்டுமப்போ கோபியரோடு கோவிந்தனோர்
வார்த்தைசொல்வான்.
பாரடி பெண்மயிலே, ஓரடி உண்மையிலே;
தேரடி ஓடமதில் நீரதை அடைத்துவிட
உங்களரைச் சேலைதன்னைச் சங்கையில்
லாமல்அடைத்தால்
மங்கையரே, ஓடத்தில்நீர் மட்டுப்படும்
என்றுரைத்தார்.
பாரும்மகி பாலா, பரீக்ஷித்தெனும் சீலா!

3. கண்ணன்சொன்ன வார்த்தைஅந்தப் பெண்மணிகள்
கேட்டுமெத்த
எண்ணம் குழைந்தேங்கிமணி வண்ணனையே
பார்த்துரைப்பார்!
மானம் பெரிதல்லவோ மாதவா, மாதருக்கு?
ஈனம் இதனைச் செய்வோம்; ஏழைகளைக்
காக்கவேணும்
மாயனே, போற்றி,அதி நாயனே, போற்றி, எங்கள்
ஆயனே, போற்றி,வேறுபாயம்நீர் சொல்லும்
என்பார்.

(28)

(பல்லவி)

தப்பிக்கும் வழிதேடினர்;—மாதரெல்லோரும்
ஒப்பிஒன்றுகக்கூடினர். (தப்பிக்கும்)

(அநுபல்லவி)

எப்படியா கிலும்நாம் எல்லோரும் பிழைப்போமென்
றெண்ணிக்கண் ணன்மொழியை நண்ணிக்
கோபியரெல்லாம் (தப்பி)

(சரணங்கள்)

1. பாரும் இருண்டதென்றால் இங்கே நம்மை
யாரும் அறியாள் என்றாள்;
தேரும் நினைவடைந்து தேவிஎல் லோரும்சேர்ந்து
தேடியோடத்தின் துவாரம்மூடி, எல்லோரும்கூடித் (தப்பி)

2. பட்டுப்புடைவை அவிழ்த்தார்—துவாரமதனில்
நட்டுத் தலைகுனிந்து நாணி அகம்குழைந்து
விட்டுப் பிதுங்கி அடைத்தார்;
நாடிக் கண்ணன்அருளைத் தேடிக்கோ பியர்கூடித் (தப்பி)

3. அத்தனைபே ரும்கூடினார்; சேலைகள்கொண்டு
குத்திக் குத்தியே மூடினார்;
சுற்றி யமுனைக்குள்ளே பற்றி இழுக்கக்கண்டு
சொக்கி மனம்மிகவும் வெட்கி துக்கித் தவிழ்ந்து (தப்பி)

4. பச்சைப் புடைவையைஈந்தார்;—துவாரம்அடைத்து
லஜ்ஜை யுடனே ஓய்ந்தார்.
கச்சை சேலைகள் ஒன்றும் மிச்சமில் லாமல்போகக்
கண்டுகோ பியர்மனம விண்டு விசனம்கொண்டு (தப்பி)

5. எல்லோரும் பங்கமானார்,—ஓடமதற்குள்
அல்லோ கலமாய்ப் போனார்
நல்லோர்க் கருளும்ஜகந் நாதன்கண் ணனைக்கண்டு
நாணித் தலைகுனிந்து பாணியினால்மறைத்து (தப்பி)

(29)

1. பங்கய மதிமுக மங்கையர் கோபியர்
பஞ்சாடைகளை அனைத்தும்
பொங்கி யமுனைஅலை எங்கிலும் மோதியே
போட்டுமே நீரினில் அமிழ்த்தும். (தப்பி)

2. கண்டு பயந்து கவலையால் கோபியர்
கலங்கிடும் வேளையில் மேக
மண்டலந் தன்னில்இருள் நீங்கி வெளிபரந்து
மழையுடன் இடிநின்று போக. (தப்பி)

3. ஆகாசந் தன்னில் இருள்நீங்கி ஒளிதிகழ்ந்து
ஆதவன் ஒளிமிக ஓங்கி
ஏக வெளிச்சமாய்ப் போகவே மாதர்கள்
எல்லவ ரும்மனம் ஏங்கி. (தப்பி)

4. அக்கணம் மாதர்கள் வெடகம் அடைந்தார்;
அயனெழுத் தெனமிக நொந்தார்;
துக்கமுட னேமனம் விக்கியே நைந்தார்;
துரைக்கண்ணன் பாதமலர் அடைந்தார். (தப்பி)

(30)

(பல்லவி)

இந்தவேளை என்ன செய்குவோம்?—யதுகுலேசா,
(இந்த)

(சரணங்கள்)

1. இந்தவேளை ஏது செய்குவோம் உன்றன் பாதம்
போற்றி உய்குவோம்.
சிந்தைக்குறை தீருமையனே, ஸ்ரீரமணா! (இந்த)

2. மாமிமாமன் மக்கள் உற்றார் மைத்துனர்கள்
வருமிடத்தில்
மானபங்கம் ஆயினேம்ஐயா, மாரமணா!

3. உன்றன்தந்தை நந்தருடன் பந்துமித்ரர்
இதைஅறிந்தால்
நிந்தைக்கிடம் ஆகும்ஐயனே, நீலவர்ணா! (இந்த)

4. அஞ்சாமல் காரும்ஐயா, ஆடைஇப்போ தாரும்ஐயா,
பாஞ்சாலி மானம்காத்திட்ட பாலகிருஷ்ணா! (இந்த)

———

## இன்னம் வரக் காணேன்

லோகசகி மாதவனே, ஸ்ரீரமணி லோலனே,
உருவிமனம் சென்றதாகில்; இன்னம்வரக் காணேனே!
கண்ணு உன்னைக் காணுமல் கண்கள் ரெண்டும் தேடுது.
என்றன்மனம் வாடிக்கொண்டே இன்னம்வரக்
காணேனே!

## கண்ணன் ஓடம்

வளமிகுந்த மதுரைதனில் வசுதேவர் தேவகிக்கு
உளமகிழ்ந்து திருமகனுய்—வந்து,
உதித்தொளிந்து வளர எண்ணி

(முடுகு)

நந்தகோபர் யசோதை தம்மனை நாடித்
தந்தையால் தக்ஷணம் வந்துதான் கூடிக்
கோபியாம் யசோதைமுன் குழந்தையைப் போலக்
கோலா கலத்துடன் லீலைசெய் தாரே.
பூதனை பாலுண்டு பொய்ச்சக டுதைத்துப்
பொல்லாத அசுரர்கள் இல்லாமல் கொன்று
நங்கையர் கோபிமார் மனைதன்னில் சென்று
நவநீதம் பால்தயிர் திருடியே உண்டு

உத்தமி யசோதையால் உரலில்கட்டுண்டு
ஓடியே உரலினுடன் மருதமரம் ரெண்டும்
சாய்ந்திடச் செய்தவர் சாபமது நீங்கச்
சந்தோஷ மாகவே தாயிடம் வந்து
ஆயருடன் கூடியே ஆநிரை மேய்த்து
ஆசையால் காளிங்கன் முடியில் நடித்துக்
கோவர்த்த னந்தன்னைக் குடையாய்ப் பிடித்துக்
குழலூதிக் கோவலரைக் கூடியே களித்து
அக்ரூரர் வந்தங் கழைத்திட மகிழ்ந்து
அண்ணனுடன் கூடியே அன்புடன் உகந்து
மதுரைமா நகர்வந்து மாமனைக் கொன்று
மகிழ்வுடன் வசுதேவர் தேவகியைக் கண்டு
அண்ணன்பல ராமருடன் ஆனந்த மாகி
அழகுள்ள துவாரகை நகர்தன்னில் ஏகிப்
பத்திரிகை தந்தமறை யோனுடன் சென்று
பக்ஷமாய் ருக்மிணி தேவியைக் கண்டு
சந்தோஷ மாகவே தூக்கிமடி வைத்துச்
சட்டெனவே தேரதை நடத்தியே களித்துக்
காட்சியாய்த் துவாரகா நகர்தன்னில் வந்து
கன்னிகை ருக்மிணியைக் கல்யாணம் செய்தார்.
அளித்தார் அன்பர்; துதித்தார் பலர்;
இரைத்தார்மனம் பதித்தார்.
கருணாகர வருணாலய சரணாகர வரதன்தனை

ஏலேலோ ஏலேலோ!

## கண்ணன் குறும்பு

வாவாநீல வண்ணா, வண்ணமுகக் கோபாலா,
கன்னுக்குட்டி வாலுக்கும் சின்னப்பையன் குடுமிக்கும்
ஒண்ணா முடிஞ்சுகட்டிப் பஞ்சாய்ப் பறக்கடிப்பேன்.

## கண்ணன் தாலாட்டு

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆரிரரோ!
முத்தே, பவழமே, முக்கனியே, சர்க்கரையே,
கொத்து மருக்கொழுந்தே, கோமளமே, கண்வளராய்.
ஆணிப் பசும்பொன்னே, ஆராத தெள்ளமுதே,
மாணிக்கமே, எங்கள் வாழ்வே, நீ கண்வளராய்.
அத்தை அடிச்சாளோ? அம்மான் அடிச்சானோ?
முத்துக்கண் ணீர்நிறுத்தி மோனமாய்க் கண்வளராய்.
பாட்டி அடிச்சாளோ, பால்வார்க்கும் கையாலே?
வாட்டம் ஒழிந்துநீ, மைந்தனே கண்வளராய்.
ஆயர் குலத்துதித்த அருமந்த மாமணியே,
மாயனே, கண்ணா, மகிழ்வுடனே கண்வளராய்.

# கண்ணன் திருவிளையாடல்

ஸ்ரீவர சமுத்திரத்திலே ஸ்ரீலக்ஷ்மி வாசன்
ஆலிலைமேல் கண்வளரும் அப்போஜக தீசன்
தேவாதி தேவரெல்லாம் முறையிடுவதைக் கேட்டுத்
தேவகிக்கும் வசுதேவர்க்கும் சுதனாகவே பிறந்தார்;
சங்குசக்ரம் சதுர்புஜத்துடன் அதிசயமாய்ப்
பிறந்தார்;
அந்தத் — துதிகள் செய்த வசுதேவரும் சந்தோஷமாய்
இருந்தார்;
கண்மணியைக் கையிலெடுத்து நந்தகோகுலம்
சென்றார்;
அங்கேஇருந்த பெண்பிள்ளையைக் கொண்டுவந்து
தந்தார்;
பிறந்தசேதி கேட்டுக்கம்ஸன் ஆக்ரோஷத்துடன்
வந்தான்;
அங்கிருந்த பெண்பிள்ளையைக் கொல்வேன்என்று
துணிந்தான்;
என்னைக்கொல்ல உன்னால் ஆகுமா? ஏண்டாகுரூரக்
கம்ஸா,
உன்னைக் கொல்லப் பிறந்த கண்ணன்
கோகுலத்தில் வாசம்;
சொன்ன சொல்லைக் கேட்டுக் கம்ஸன் சோர்ந்த
முகத் துடனே
இதற்கு என்ன செய்வே னென்று யோசனைகள்
செய்தான்;

பூதகியை வரவழைத்துச் சேதிகளைச் சொல்லி
நிஜராத்திரியில் போய்ப்பிள்ளையைக் கொல்லுமென்று
சொன்னான்;
அவள், அந்தமான ரூபத்துடன் நந்தகோகுலம்
சென்றாள்;
நந்தகோபன் அரண்மனைக்குச் சுந்தரியும் வந்தாள்;
பாலகனைக் கையாலெடுத்துப் பால்கொடுக்கும் போது
(கிருஷ்ணன்)
நீலியுட ரத்தமதைப் பானம்பண்ணிக் கொண்டார்;
நடுநடுங்கிக் கீழ்விழுந்த கொடும்பாவியைக் கண்டு
பிள்ளை பயந்ததென்று யசோதை சொல்லி எடுத்தாள்;
அப்போ,
தேவகி மைந்தருக்குத் திருஷ்டிகழிச் சாராம்;
அச்சுதா னந்தருக்கு ஆரத்திஎடுத் தாராம்;
நந்த முகுந்தருக்கு நாமகரணம் செய்தார்;
அந்தமான தொட்டில்இட்டு ஆடிப்பாடி னாரே;
அவர்க்கு,
தங்கத்தினால் கொலுசுமின்னச் சலங்கையண்ணாக்
கயிறு
தொங்கவிட்ட ஜிமிக்கியுடன் சொர்ணபதக்கம் மின்ன
அந்தமங்கள தாரனுக்குத் தங்கவளையல் மின்னச்
சங்கீத லோலனுக்குச் சரசபதக்கம் துன்ன
முத்துமலுக்கு ஓரக்கொண்டை சுத்திஜடை பின்னி
கஸ்தூரியால் பொட்டுமிட்டுக் காந்தியுடன் மின்ன
மூனுமாச மாகக் கிருஷ்ணன் முகத்தைப் பார்த்துச்
சிரிப்பான்;
நாலுமாச மாகக் கிருஷ்ணன் நகர்ந்து நகர்ந்து
வருவான்;

அஞ்சுமாச மாகக் கிருஷ்ணன் கொஞ்சிவிளை
யாடுவான்;
ஆறுமாச மாகக் கிருஷ்ணன் அத்தை என்று
அழைப்பான்;
ஏழுமாச மாகக் கிருஷ்ணன் எழுந்தெழுந்து நிற்பான்;
எட்டுமாச மாகக் கிருஷ்ணன் எட்டிஅடி வைப்பான்;
எட்டிஅடி வைத்தும்அவன் எல்லாவீடு வாசல்
போவான்;
சட்டிஉடைச்சுப் பால்குடிச்சுத் துஷ்டத்தனங்கள்
செய்வான்.

———

# கண்ணன் லாலி

1. நந்தகோபகுமாரா, நவநீத சோரா,
நங்கைஸ்ரீ ருக்மிணி நாதகம் பீரா, லாலி, லாலி.

2. கமலா மனோகரா, கமலாய தாக்ஷா,
கமலாச னார்ச்சிதா, கருணாக டாக்ஷா, லாலி, லாலி.

(வேறு)

3. கமலா வல்லப, கமனீ யானன,
கஞ்ச லோசன, கம்ஸ மர்த்தன,
கமல ஸம்பவ வந்தித கிருஷ்ண, லாலி, லாலி.

4. நந்த நந்தன, பக்த சந்தன,
இந்து வதன,முகுந்த மாதவ,
நார தாதிமு னீந்த்ர ஸந்நுத, லாலி, லாலி.

5. கிருஷ்ண, ராம, முகுந்த, மாதவ,
கேச வாச்சுத, தீர, யாதவ,
பக்ஷி வாகன, பக்தவத்ஸலா, லாலி, லாலி.

6. வீர தீரஅ பாரதந்திர,
வே ணு கானவி லோல, சுந்தர,
விஜய அற்புத சூர, ஸ்ரீகிருஷ்ண, லாலி, லாலி.

## கண்ணனுக்குத் தோசை

1. நித்திரையும் தான்தெளிந்து
நீலவண்ணன் எழுந்திருந்து
நினைத்துமோர் தோசை கேட்டார்.

2. யசோதை தான்கேட்டுச்
சிந்தைக்குள் மனமகிழ்ந்து
ஸ்ரீகிருஷ்ணா சிணுங்க வேண்டாம்,

3. காகம் எல்லாம் காவென்னட்டும்;
கோகிலங்கள் கூவி வரட்டும்;
மலர்களெல்லாம் மலர்ந்து வரட்டும்;
அப்போ நான் தோசை தருவேன்.

4. கல்லும்அவள் காய வைத்துக்
காராம் பசுக்கறந்து
க்டுகியவள் நீராடியே,

5. நில்லும்ஐயா நீல வண்ணா,
நீர்சண்டை போடாதீர்;
கையிலொரு தோசை தருவேன்.

6. அஞ்சிஅவர் தயிர்கடைஞ்சு
கொஞ்சிஅவள் கூப்பிட்டுப்
பஞ்சுபோலத் தோசை சமைச்சு
அஞ்சுதோசை களைவச்சு
அதன்மேலே வெண்ணெய் வச்சு
அண்ணனுக்குப் உமக்கும் தருவேன்.

7. அரைவடமும் கிண்கிணியும்
அல்லிப்பூ வெண்டயமும்
பீதாம் பரத்தின் ஒளியும்
புறம்பார்த்துச் சின்னிக் கிருஷ்ணன்
பிரியத்துடன் வரும்போது
பிட்டடைவாய்த் தோசை தருவேன்.

8. ஆலிலேமேல் பள்ளி கொள்ளும்
அச்சுதா, ஹரிஉமக்குப்
பாலர்வந் தெழுப்பின போது
சோலே வெள்ளி ஆனவுடன்
சிறுமலரும் பூஎடுத்து
அப்பனே தோசை தருவேன்.

9. அண்டமெல்லாம் ஓர் அடியில்
காலால்
மண் ணும் அளந்தவரே
தையலெனேப் பார்க்கவந் திரோ?
............
முகம்துடைச்சு மைஎழுதி
மதிமுகத்தில் திலகம்இட்டு
அப்பவே தோசை தருவேன்.

10. நந்த கோப நந்தருக்கு
நவநீத சோரருக்கு
வைகுண்ட வாசருக்கு
வசுதேவ பாலருக்கு
வெண்ணெய் வச்சுத் தோசை தருவேன்.

# கண்ணாடி காட்டுதல்

(பல்லவி)

கண்ணாடி பாரும் மன்னா,—கமலக்கண்ணா,

(அநுபல்லவி)

விண்ணோர் புகழும் சீலா, விஜயஸ்ரீ கோபாலா,
(கண்ணாடி)

(சரணம்)

சியாமசுந் தரகாத்ரா, ஸாரஸ தளநேத்ரா,
சாதுசுப ஜனமித்ரா! (கண்ணாடி)

# கஸ்தூரி ரங்கன் துதி

(பல்லவி)

கஸ்தூரி ரங்க நாதா
கமலம்நேர் பாதா!

(அநுபல்லவி)

ஹஸ்தத்தில் சார்ங்கந்தரித்
தானந்தச் செங்கோல் செய்யும் (கஸ்)

(சரணம்)

பாஞ்சஜன்யம் சுதர்சனம் பக்கம் ஒலிக்க
வாஞ்சைமிகும் கமலை வக்ஷஸ்தலம் வஸிக்க
உந்திக்கமலம் உதித்தோன் முந்தி உதிக்க
வந்துஇந்தக் காவேரியை மாலையதாய் மதிக்கும் (கஸ்)

# கிருஷ்ணன் தாலாட்டு

சீரான கண்ணிகளைத் திருமால்மேல் செப்புதற்குக்
காரான கரிமுகனும் கலைமகளும் காப்பாமே;
அன்றமரர்க் காக அயோத்தியெனும் பட்டணத்தில்
சென்று அவதரித்த சீராளா, கண்வளராய்;
எத்திலிளங் கோபியரை ஏமாற்றி வெண்ணெயுண்டு
மத்திலடி பட்டதொரு மாதவனே, கண்வளராய்;
வாதனைகள் செய்யஎண்ணி வஞ்சகமாய் வந்தஅந்தப்
பூதனையின் உயிர்குடித்த புண்ணியனே, கண்வளராய்;
துஷ்டர்பலர் சபைதனிலே துரோபதையைப்
துகிலுரிய
இஷ்டமுடன் துகிலளித்த இன்னமுதே
கண்வளராய்;
வில்விதுரன் தன்னுடைய வில்எடுக்க ஒட்டாமல்
நல்விதுரன் தன்மனையில் நடப்பித்தாய், கண்வளராய்.
பஞ்சவர்க்குக் கர்ணன் பந்துமுறை கூறுமல்
வெஞ்சமரை விளைவித்த வஞ்சகனே, கண்வளராய்.
கடும்பாம்புக் கொடியுடைய காவலன்பால் தூது
சென்று
கொடும்போரை மூட்டுவித்த கொடியோனே,
கண்வளராய்;
போர்வளரும் படுகளத்தில் போர்வெறுத்த
அர்ஜுனர்க்குச்
சீர்வளரும் நீதிகளைச் செப்பினுய், கண்வளராய்.
வஞ்சனையி னுல்சிசுவை வாளுக்கு விருந்தளித்து
நஞ்சனைய கஞ்சனுக்கு யமனுய் கண்வளராய்!

# கிருஷ்ணன் பாட்டு

(அப்பாவுப் பண்டாரம் பாட்டு)

[மார்கழி மாதத்தில் விடியற்காலம் பல பண்டாரங்கள் கடவுளைக் குறித்துச் சில பாட்டுக்களைப் பாடி, ஊரைச் சுற்றி வருவார்கள்.]

அஞ்சலி பண்ணியே—மாயவன்
அருளினால் அடியேன் நினைவினால் அடியில்
இங்கித மாகவே கிருஷ்ண விலாசம்
சங்கீதமே செய்தேன்.
துவாரகா புரிவாஸர்—மாயவர்
கோபஸ்த்ரீ அழகர்,
சாலப் பரிமள வாசனை யுடனே
கேளிக்கை செய்தார்;
மிக்கவும் வரந்தருவார்—மாயவர்
நினைக்கும் பொருள் தருவார்;
சொக்கணி யாகவே கிருஷ்ண விலாஸம்
மிக்கெனக் கேளுமென்றார்.
வாயிலே வெண்ணெய் தடவிக்—கிருஷ்ணன்
பாலைக் குடிச்சான் என்று
மாதர் சொன்னஉடனே—அந்தக் கிருஷ்ணன்
ஆதி முதலாகக்—கிருஷ்ணன்
ஆயர்பாடியில் வளர்ந்தான்;
மாயவன் கிருஷ்ணன் அவன்
.........

கோவர்த் தனகிரியைக்
குடையா கப்பிடித்தான்;
ஓட்டுத்திண்ணை மேலே—கிருஷ்ணன்
உரலை வச்சேறி
கட்டி வெண்ணெயெல்லாம்—பகவான்
சர்வாங்கமும் தின்றான்;*
இந்தாடி வெறுஞ்சட்டி—என்று
எடுத்துக்காண் பித்தாண்டி;
உறியில் வெண்ணெயெல்லாம்—கிருஷ்ணன்
உருட்டித் தின்றுவிட்டான்;—பெண்களை
அதட்டித் தின்றுவிட்டான்;
வெறும்சட்டி காட்டி—அந்த
வெறுமைகாண் பித்தாண்டி.
என்னடா காரியம்–கிருஷ்ணா,
இத்தனை துடுக்கு ஏண்டா?—கிருஷ்ணா,
இத்தனை பதைப்பு ஏண்டா?
மாமியார் இதைக்கண்டால்—கிருஷ்ணா,
மரியாதை போகுமேடா;
தங்கக் குடங்கொண்டு—பெண்களெல்லாம்
தண்ணிக்குப் போகையிலே—பெண்கள்
ஜலத்துக்குப் போகையிலே—பெண்கள்
மடுவுக்குப் போகையிலே—கிருஷ்ணன்
தண்ணீர் மொடாவைத் தரையில் இறக்கித்
தடவி முத்தம் தந்தான்;
முத்தந் தாடி என்றான்;—கிருஷ்ணன்
மூக்குத்தி கழற்றிக் கொண்டான்;—பச்சைக்கல்
மூக்குத்தி கழற்றிக் கொண்டான்;—ஒண்டிக்கல்

* (பா-ம்.) சர்வமும் தின்றானே.

மூக்குத்தி கழற்றிக் கொண்டான்;—வெள்ளைக்கல்
மூக்குத்தி கழற்றிக் கொண்டான்;
ராட்சசி பூதனை தனமே குடித்தவன்;
பாச்சி பாச்சி என்றழுதான்;
மட்டிமூட மாச்சே—என்னைக் கொண்டவன்
மாட்டி அடிப்பானே!—கிருஷ்ணு
எட்டி அடிப்பானே!—கிருஷ்ணு
துரத்தி அடிப்பானே!—கிருஷ்ணு
புண்ணிய மாப்போகுது;—கிருஷ்ணு
மூக்குத்தி தாடா.
ஏண்டி இடைச்சிகளே,—எனைக்கண்டால்
ஏண்டி பதுங்கிறீங்க?
சின்னக் குழந்தைபோலே—நான்வருவேன்;
விந்தை களைச்செய்வேன்;
கூடியே போவோம் வாடி—மாமி
மடியைப் புடிச்சிழுப்போம்;—கிழவி
துணியைப் புடிச்சிழுப்போம்.
அடியே பிடியே என்று கிருஷ்ணன்
துடியாப் பேசுறாண்டி;—அந்தக் கிருஷ்ணன்
துடியாப் பேசுறாண்டி.
என்னடி யசோதை, நீபெத்த புள்ளை
பேச்சுத் துடுக்குக்காரன்;—ரொம்ப ரொம்பப்
பேச்சுத் துடுக்குக் காரன்;
ஊரை விட்டுக் குடிவிலகிப்
போக லாமோடி?—நாங்கள்
போக லாமோடி?
கையும் களவுமாக—என்மகனைக்
கட்டிக் கொண்டு வாங்க;—கிருஷ்ணனைக்

கட்டிக் கொண்டு வாங்க;
செய்கிற தண்டனையெல்லாம்—உங்கள் எதிர்க்கச்
செய்துமுடிப் போம் வாடி.
தாகம் எடுக்குதென்றான்;—கிருஷ்ணன்
தாடி மோரை என்றான்;
தாடி தயிரை என்றான்;
தாடி பாலை என்றான்;
மொந்தை எடுத்து மோரு வார்க்கையிலே
மோருஅடி ஸ்தனத்தை என்றான்;
அர்த்தராத் திரிதனிலே—பெண்களெல்லாம்
நித்திரை போகையிலே
சத்தம் பண்ணாமல் மெத்தெனப் போய்ச்
கிட்டவும் படுத்தாண்டி; - கிருஷ்ணன்
கேளிக்கை செய்தாண்டி;—அந்தக் கண்ணன்
கேளிக்கை செய்தாண்டி;—அந்த மாயவன்
கேளிக்கை செய்தாண்டி;—அந்தக் கிருஷ்ணன்
கேளிக்கை செய்தாண்டி.
பட்டுப் பாய்தனிலே—எங்கள் இடையன்
கட்டிலில் படுத்திருக்கச்
சுற்றிப் பார்த்துவந்து—அந்தக் கிருஷ்ணன்
பாம்பை விட்டாண்டி;
பாம்பை விடக்கொள்ள—என்னைக்கொண்டவன்
எங்க இடையர் ஓடையிலே
கோனார் ஓடையிலே
இடைச்சியைப் புடிச்சுக்கொண்டான்;—கிருஷ்ணன்
இத்தனை கோலம் செய்தான்.
இடையனைக் காணாமல்—பெண்களெல்லாம்
ஏங்கி அழும்போது—பெண்களெல்லாம்

கூடி அழும்போது
ஏண்டி அழுகிறே இடைச்சி என்று
எம்பிக்கூத் தாடினுண்டி.
காய்ச்சின பால்நம்ம வீட்டில் இருக்கக்
கட்டித் தயிர்நம்ம வீட்டில் இருக்க
இஷ்ட பாக்கியம்நம் வீட்டில் இருக்க
இங்கிதப் பால்நம்ம வீட்டில் இருக்க
இங்கிதத் தயிர்நம்ம வீட்டில் இருக்க
இங்கித மோர்நம்ம வீட்டில் இருக்க
தங்களுடைய வீட்டிலே தயிர்பால் குடிக்கத்
தவழ்ந்து வந்தா னேடி?
ஆரடி இடைச்சி என்புள்ளே மேலே
சும்மா சொல்ல லாமோ?—அந்தக் கிருஷ்ணன்மேலே
சும்மா சொல்ல லாமோ?—அந்தக் கண்ணன் மேலே.
இப்பவும் பால்குடிச்சு—நான்பெத்த புள்ளை
ஏணையி லேபடுத்தான்;—அந்தக் கிருஷ்ணன்
ஏணையி லேபடுத்தான்;
சித்திர மேடையிலே—என்குழந்தை
நித்திரை போருண்டி;—என்குழந்தை
நித்திரை போருண்டி;—அந்தக் கிருஷ்ணன்
நித்திரை போருண்டி.
ஆறுமா சக்குழந்தை நான்பெத்த புள்ளை
நகரமாட்டான் போடி—; அந்தக் கிருஷ்ணன்
தவழ மாட்டான் போடி; - அந்தக் கிருஷ்ணன்
தாயார் ஸ்தனம் குடிச்சுச் செவ்வையாய்
உண்ண மாட்டான் போடி;
மாயக் கள்ளி போடி;—பெண்களா,
மந்திர வாதி போடி;—பெண்களா!

திருட்டுக் கண்ணனைப் பெற்று யசோதை
உருட்டி அழுது போடி;
திருட்டுப் பாலைக் குடிச்சான்;—அந்தக் கிருஷ்ணன்
மிரட்டி லீலை செய்தான்.
சித்திர மேடையிலே—கிருஷ்ணன்
நித்திரை போனானே;
எட்டிப் பாருங்கோடி;—அந்தக் கிருஷ்ணனை
எட்டிப் பாருங்கோடி.
எட்டியே மெள்ளப் பார்த்தாள்—ஒரு இடைச்சி;
எட்டியே மயிர்பிடித்தான்—அந்தக் கிருஷ்ணன்
எட்டியே மயிர்பிடித்தான்.

———

# கிருஷ்ணனைத் தாய் வினவுதல்

*[சாமா ராகம்; ஆதி தாளம்]*

**பல்லவி)**

ஏண்டா உனக்கிந்த துஷ்டத் தனம்கிருஷ்ணா?
வேண்டாம்இக் காரியம்,என் வார்த்தையைக்
கேளடா. (ஏ)

**(சரணங்கள்)**

1. உறியில் பாலினை உருட்டிவிட் டோடினாயா?
பிரியமுடன் இருந்தென் வார்த்தை கேளடா.

2. சட்டி வெண்ணெ யெல்லாம்
சாப்பிட்டுத் தின்றாயா?
பட்டி நாரிகள் கண்டால்
பதைத்து அடியோராடா?

3. இக்குவ லயந்தனில் என்பேரை அழிக்க வந்தாய்;
முகுந்த ராமானுஜ தாசன் பணிவோனே!

## கோகுலக் கண்ணன்

(பல்லவி)

நந்த கோகுலக் கண்ணன் யாரடி?
பெண்ணே அடி கண்ணே! (நந்த)

(சரணங்கள்)

1. தேவகி வயிற்றில் திருவவ தாரனடி;
திரும்பிப்பார்க் கும்போது யசோதைக்கு மைந்தனடி;
நந்தகோ பர்மனம் மகிழக் களித்தவண்டி;
நாடிக்கோ பியர்மனையில் தேடிவெண்ணெய்
உண்டவண்டி. (நந்த)

2. கோபால ருடன்கோவுகள் மேய்த்தவண்டி;
கோவர்த்த னத்தைக் குடையாப் பிடித்தவண்டி;
புல்லாங் குழலூதிப் பொண்களுடன்கூடிக்
கோலாகல லீலையுடன் வேடிக்கை செய்தவண்டி.
(நந்த)

## கோபியர் ஆட்டம்

கோபியரே வாருங்கள்
கோகுலத்தில் சேருங்கள்;
கந்த புஷ்பம் கொண்டெடுத்துச்
சந்தோஷமா ஆடுங்கள்.
மின்னல்கொடி போல நீங்கள்
விழுந்து விழுந்து ஆடுங்கள்.

# கோபியர் முறையீடு

கிருஷ்ணன் செய்தி கேளும்; —மாயக்
கிருஷ்ணன் செய்தி கேளும்;
அரிது தவழ்ந்துவந்து—எங்களை
அணைத்துக் கொள்கிறானே!
உரல்அடுக்கி ஏறித்—தயிர்பால்
உறியை உருட்டறானே!
பின்னே வந்து மெதுவாய்ப் பெண்கள்
பின்னல் பற்றி இழுப்பான்;
திரும்பிப் பார்த்துக் கேட்டால்—யாரோ
தெரியா தென்று சொல்வான்;
முகத்துக் கெதிரே வந்து - விரைவில்
முத்தம் இட்டு மறைவான்;
தேடிப் பார்க்கும் போது—எங்கும்
தெரிந்தி டாமல் ஒளிப்பான்;
எங்கள் புருஷர் கண்டால்—நாங்கள்
என்ன செய்வோம் அம்மா?
குழந்தை என்று பார்த்தேன்;—அவன்செய்
கொடுமை மெத்தச் சகியோம்;
பொறுத்த வரைக்கும் போதும்;—உன்மகனுக்குப்
புத்தி சொல்லும் அம்மா!

# கண்ணன் கூறும் விடை

[கோபியர் முறையீடுபற்றி.]

(பல்லவி)

பொல்லாத கோபிமார் அம்மா!—அவர்கள்
இல்லாத வார்த்தைகளைச் சொல்லுறார் அம்மா!

(சரணம்)

1. இருட்டிலே வெண்ணெய் எட்டுமோ?—அங்கே
இருக்கும் உறியில் வெண்ணெய் எனக்கெட்டுமோ?
திருட்டுப்பேய் என்னைத் திட்டுமோ?—இந்தப்
புரட்டர் சொல்றது சரிக்கட்டுமோ? (பொல்)

2. வெண்ணெயிங்கே கிடையாதோ?—தங்கக்
கிண்ணியிலே நீதந்த வெண்ணெய்போ தாதோ?
அண்ணனுக்குத் தெரியாதோ?—இந்த
விண்ணுணக் காரர்கள் எண்ண லாகாதோ! (பொல்)

3. அம்மாநான் சின்னஞ் சிறியேன்;—இந்தப்
பொய்ம்மையான பொண்களுடன் ஒண்ணுமறியேன்;
செம்மையாய் எங்கும் திரியேன்;—வீணுகச்
சும்மா நானொரு காரியம் புரியேன். (பொல்)

4. பாலனென்று ஏசுறார் அம்மா!—கோ
பாலதாசன் என்றுகை வீசுறார் அம்மா!
மேலும்இன்னும் கூசுறார் அம்மா!—இந்த
வீணுன வார்த்தைகளைச் பேசுறார் அம்மா! (பொல்)

# கோயிலின் பெருமை

[ஸ்ரீரங்கத்தின் வருணனை போலும்!]

புதுமலராம் பூவனத்திலே சிறுகிளிகளும் சேருமாம்;
மதுரபானம் பண்ணிக் கிளிகள் மகிழ்ந்துகொண்
டிருக்குமாம்;
அங்கி லுள்ள ஆண்கிளிகளும் ஆடுமயிலும்
சூழுமாம்;
இங்கிலுள்ள பெண்கிளிகளும் எழுந்துநடனம்
ஆடுமாம்;
சிங்கங்களாம் பருவதத்தில்; சேர்ந்திருக்கும்
மான்களாம்;
மந்திகளும் வானரங்களும் வந்துசூழ்ந் திருக்குமாம்;
கஸ்தூரி ரங்கருக் கேற்றாற்போல் காவேரிஇரு
மாலையாம்;
விஸ்தார மாகவே கமுகங் குலையாம்;

[விரிஞ்சதென்ன மரமாம்;]

குந்தளம் பொன்னம்மா கோவில் அழகாம்;
கொடிரெண்டு ஸ்தம்பமாம்......
அந்தமுடனே வைகுண்ட வாசலாம்;
அஞ்சு மூணு குழிவாசலாம்;
சக்கரத் தாழ்வார் சந்நிதியாம்;
தங்கவி மானங் களாம்;
தங்க விமானத்தின் பேரில் நின்ற
சதுரர்வசு தேவராம்.

# கோவிந்தனிடம் முறையீடு

1. நட்டசெடி பூக்கவில்லே—விட்ட கன்று ஈனவில்லே;
குட்டியும் பொறக்கவில்லே—கோவிந்தா, என்
பட்டியும் நெறையவில்லேயே!

2. சட்டி பானே காணவில்லே;—வெட்டியமண்
போதவில்லே;
மட்டு மட்டாய்ப் போனதையா—கோவிந்தா;
செட்டுக் கட்டாய் ஆனதையா!

3. ஆறும் பெருகவில்லே;—ஐயன் தேரும் ஓடவில்லே;
நீரும் பெருகிவந்ததே;—கோவிந்தா,
ஊரும் தெரியவில்லேயே!

4. ஆல மரத்துக்கிளி—ஐயன் வளர்த்தகிளி,
சோலேப் பசுங்கிளியோ?—கோவிந்தா,
காலன் வரும் ஒளியோ?

5. ஒண்ணும் அறியவில்லே:—கண்ணும் தெரியவில்லே;
பொன்னியும் ஓடிவருகிருள்;—கோவிந்தா,
மென்னியும் அடைச்சிருமுதே!

6. நீலக் கடல்அலேயில்—ஏலம் எடுத்துவந்தேன்;
ஜாவிப்பு வேணுமையா,—கோவிந்தா,
நான்இப்போ அடிமை ஐயா!

7. ஊணும் இறங்கவில்லே; உள்ளம் படியவில்லே;
காணும் இமைநேரத்தில்—கோவிந்தா,
உயிரை அடிமைவச் சேனே!

8. பண்ணும் பரிகாசம்—புண்ணுச்சு ஒருதோசம்;
எண்ண முடியவில்லேயே!—கோவிந்தா,
கண்ணுலே பார்த்திடுவாயே.

## சங்குச் சக்கர சாமி

சங்குச் சக்கரச் சாமி வந்து
சிங்குச் சிங்கென ஆடுமாம்; (சங்கு)

கொட்டுக் கொட்டச் சொல்லுமாம்; - அது
கூத்தும் ஆடப் பண்ணுமாம். (சங்கு)

உலகம் மூணும் அளக்குமாம்—அது
ஓங்கி வானம் பிளக்குமாம் (சங்கு)

கலகலென்று சிரிக்குமாம்—அது
காணக் காண இனிக்குமாம். (சங்கு)

[இது சேது சம்ஸ்தான வித்துவான் ரா. இராகவையங்கார் பாடியதாகச் சொல்வர்.]

# திருவரங்கக் காடு

1. காடாவது காடு—இரு—காவேரிசூழ் காடு;
கருந்துளசிக் காடு—துதி—கண்ணன்பதம் தேடு
கனிந்து புகழ்பாடு—காண்பாய் முத்தி வீடு
ஏறு சைகிள் வண்டி—வன—அன்ன மேபுகழ்
சொன்னமே;
ஏறு சைகிள் வண்டி.

2. பானமாவது பானம்—நல்ல—பக்திரஸ பானம்,நீ
பண்ணிவந்தால் கானம்
பரிசளிப்பான் ஞானம்;—நீ
ஏறடி வைராக்ய வண்டி; மனக்
கண்மணி, புத்திப் பெண்மணி,
ஏறடி வைராக்ய வண்டி.

3. மூட்டையாவது மூட்டை;—அது
மாய பந்த மூட்டை.
நான்சுமக்க மாட்டேன்;—இத்தை
விட்டுப் பிரிந்து போட்டேன்.
ஏறுகுரு வாக்ய வண்டி;—மனக்
கிள்ளையே வனப்—புள்ளியே,
ஏறுகுரு வாக்ய வண்டி.

4. ஆங்காரத்தை விட்டு
ஆறு பேரைச் சுட்டு—உன்
ரங்கையன் பாதம் தொட்டு
அவனும் நாமும் ஒட்டு.—பின்
ஆனந்தத்தில் வாழ்வோமடி..—அவன்
ஆதியே—ஜகஜ்—ஜோதியே,—கண்டு
ஆனந்தித்து வாழ்வோமடி.

# பத்தியம்

நந்தகோப குமாரா, நவநீத சோரா,
பூதனுஸம் ஹாரா, புண்ய புருஷா,
கோகோபி காரமணு, கோபால பயஹரணு,
கோவர்த்த னேத்தாரணு, கோகுலேந்த்ரா,
கல்யாண யதுவீர, காருண்ய குணசீல,
காளிய பணரங்க நாட்ய லோலா,
கமலா மனேஹரா, கஞ்சதள நேத்ரா,
கமனீய விக்ரஹா, சுபசரித்ரா,
மமமா னஸகுமுத பூர்ண சந்த்ரா,
மதுரா புரிநிலய மமப்ராண காந்தா!

# பரிமள ரங்கர் பவனி

(பல்லவி)

பக்ஷிரா ஜன்மீதில் பவனி வரும்ஸுகந்த
பரிமள ரங்க ப்ரபோ!

(அநுபல்லவி)

குக்ஷியில் உலகத்தை வைத்துஸம் ரக்ஷிக்கும்
வீரனே, தீரனே, நிதியில்கு பேரனே, (பக்ஷி)

(சரணங்கள்)

1. துரக கஜம்பதாதி தொனிமிகு கீதமும்
பரத நடம்புரியும் பாவைவி நோதமும்
உரக சயனன்புகழ் உரைக்கின்ற வேதமும்
சரணம் அடைந்தபக்தர் தமைக்காக்கும் பாதமும்
(பக்ஷி)

2. சாரங்கம் ஸுதர்சனம் சப்திக்கும் பாஞ்சஜன்யம்
வீரங்கொள் நந்தகியும் வென்றிடும் கேடயமும்
பாரங்கொள் கௌமோதகி பாரம்செங்
கோல்துணிவாய
ஊரங்க மாகிய ஸ்ரீரங்க நகரந்தனில் (பக்ஷி)

3. வரந்தரும் விமானத்தை வலம்வரும் பாக்யமும்
பரந்தகா வேரிதனில் படியும்ஆரோக்யமும்
சிறந்தஸ்ரீ ரங்கமதில் ஜீவிக்கும் சிலாக்யமும்
புரந்தரர்க் கும்கிட்டாத அரங்கரத் னத்தைக்
கண்டேன். (பக்ஷி)

# பரிமள ரங்கர் துதி

(பல்லவி)

பரிமள ரங்கனைத் துதிப்பாயே—நம்
பார்த்தசா ரதிதனை மதிப்பாயே.

(சரணங்கள்)

1. கரிக்கபயம் தரும்கரு ணாளன்;—மத
கரிக்கபயந் தரும்கரு ணாளன்;—தந்து
காத்து ரட்சித்திடும்க்ரு பாளன்.
ஸ்மரிக்கும் அடியவர் தயாளன்;—தன்னை
ஸ்மரிக்கும் அடியவர் தயாளன்;—காவேரிக்குத்
திருமாலைப் பேறுதந்த தோளன். (பரிமள)

2. நீளை பூமி மகிழும் மணாளன்—ஸ்ரீ
நீளை பூமி மகிழும் மணாளன்;
காளையாம் கஞ்சனை எதிர்த்த காலன்;
பாளைக் கமுகில் இருந்தசு ராளன்;—தெங்கின்
பாளைக் கமுகில் இருந்தசு ராளன்;—திரு
நாளைக்கொரு சேவை தரும்சுகு ணாளன். (பரிமள)

(2)

(பல்லவி)

பல்குன மண்டபத்தில் பச்சை வடம்சாத்திய
பரிமள ரங்கப்ரபோ,—சுகந்த
பரிமள ரங்கப்ரபோ!

(அநுபல்லவி)

சற்குண சாந்தர்கள் சபையில்மஞ் சனமாடி
நற்குண விகிதர்மேல் நயனவிலாசம் கூடி (பல்குன)

(சரணங்கள்)

1. பூதலத் தரசர்கள் புதுமையா கியஅநேகம்
மாதவத் துகில்தர மகிழ்வுடன் போர்த்தார்;
சீதள மிகுதியால் சிறந்தகற் பூரதீபம்
ஆதரவாக அருகில்காண் பிக்கஏற்றுப் (பல்குன)

2. வானுல கினர்மெய் வணங்கிச்சென் றிடவேண்டிப்
பானு கிரணங்களைப் பகிர்ந்துநின் ருண்டி;
தேனுக் கினியமொழி தெளிவாய் அரையர்பாடி
மூனுமுறை கற்பூரம் முடியஆஸ் தானம்நாடிப்
(பல்குன)

———

# பாண்டுரங்கர் தாலாட்டு

1. பண்டரி புரந்தனிலே பாண்டுரங்க னுயுதித்துத்
தொண்டரிடர் எல்லாம் துடைத்தவனே,
கண்வளராய்.

2. எத்திசை யும்புகழும் ஏகநா தர்தமக்குப்
புத்தியுடன் வேலே புரிந்தவனே, கண்வளராய்.

3. சற்குணங்கள் வாய்த்த சக்குபா யானவட்கு
நிர்க்குண மதையுரைத்த நிர்மலனே, கண்வளராய்.

4. போஸலர் விபவம் ஆஸகலம் தீர்த்தபின்பு
ஆசை யுடன்மாவை அன்பாய்க் கிரகித்தவனே?

6. சோளம் விதைக்கச் சுரைக்காய் அதில்காய்க்கச்
சுரைநிறையக் கோதுமையைச் செய்தவனே,
கண்வளராய்.

7. சோகா மேளருடனே சோகமற ஆலயத்தில்
ஏகாந்த மாக இருந்தவனும் நீதானே?

8. வேதிய ரும்விலகும் கீழ்ஜாதி பாராமல்
பேதமற ஒன்ருய்ப்பூ ஜித்தவனே, கண்வளராய்.

9. சேரிதனில் பக்தருடைப் பாரியவள் கொட்டுதயிர்
ஊரில் மறையவர்க்காய் உடையில்காண் பித்தவனே?

10. பக்தர் முகத்தடியைப் பகவானே, உன்முகத்தில்
முற்றும் வகித்தஎன்றன் முகுந்தனும் நீதானே?

11. தாஸர்க்கு நெய்யைத் தலைமேல் சுமந்துவந்து
தாஸரது கையால் தலையிலடி பட்டவனே?

12. தாஸருக்குத் தொண்டாய்த் தாஸர் கனகமுடி
தாசியின் கையில்கொடுத்த தன்யனும் நீதானே?

13. தாஸருட காலில் தளைவிலங்கு செய்தவர்முன்
ஆசையுடன் காலில் அணிந்தவனும் நீதானோ?

14. பக்திப் பிரபாவம் பலபேர் அறிந்திடவே
உற்ற கழுமரத்தை உடன்எரியச் செய்தவனோ?

15. ஜன்னிபாய் பாட ஜகதீசா, கூடியிருந்து
நன்றாக மாவை அரைத்தவனும் நீதானோ?

16. பீதாம் பரத்தைவிடுத்துப் பீறல் தனைஉடுத்துப்
போதாம் பரத்திலுறும் பூரணனும் நீதானோ?

17. கனகாம் பரத்துடனே கனகமுத்து மாலைதனை
இனமறிய வைத்து இடுக்கணறச் செய்தவனோ?

18. நாமதேவர்உடைய நேமமாம் பக்திகண்டு
ப்ரேமையுடன் அன்னம் புஜித்தவனும் நீதானோ?

19. சுத்த ஸ்வரூபச் சுருதிசொற்கெட் டாதவனோ?
முத்திச்சூ டாமணியோ? முடியடி அற்றவனோ?

20. சித்கனா னந்தமதோ? சிந்தையறச் செய்ததுவோ?
நிர்க்குண மாம்நிலையோ? நித்யசுகம் ஆனதுவோ?

———

# மகனுக்குப் புத்தி சொல்

*[ராகம்: சகானா: தாளம்: ரூபகம்]*

**(பல்லவி)**

**புத்தி சொல்லடி யசோதை—உன் மகனுக்குப்**
புத்தி சொல்லடி யசோதே!

**(அனுபல்லவி)**

புத்தி சொல்லடி யசோதே
நித்தம் உங்கள் கிருஷ்ணனுக்கு;
அத்தை மாமி நாத்தி என்றும்
சற்றும்மரி யாதை இல்லை;

**(சரணங்கள்)**

1. கட்டி என்னை அணைத்தானா?—அணைந்ததற்கு
தொட்டுக் தாலி கட்டினானா?
கட்டவும்சம் மதித்தானா?—இப்படிப்பட்ட
துஷ்டப்பிள்ளை பெற்ற தேனோ?
துஷ்டத் தன்மை பிறந்த நாளும்
மட்டுமரி யாதை இல்லை;
கட்டிலின்மேல் உரியில் வெண்ணெய்
கட்டிவைக்க ஆசை இல்லை. (புத்தி)

2. சித்திர மெத்தை மீதில்இருந்து—அசைந்தசைந்து
நித்திரை செய்வதுதான் கண்டான்;
மெத்தெனவே ஓடிவந்தான்; - கையால் வாயைப்
பொத்தியே அடைத்துக் கொண்டான்.
மட்டு மீறி என்ன செய்வோம்?
வெட்கத்தையா ரோடே சொல்வோம்?
அத்தனைபேர் பெண்களிலே
பத்தினி ஒருத்தி இல்லை.

3. பண்டுபழி எங்கள் மீதில்—அந்தக் கிருஷ்ணனைத்
தண்டனை செய்யலொண்ணுதா?
கண்டும்காணுதே இருந்தால்—அவன்மனம்
சண்டை ஏனென்றெண்ணுதா?
வண்டுபோல் இருந்தசுகம்
கண்டவன் இவன்அல்லவோ?
பெண்டென்று சொல்லுவதைக்
கொண்டவன் அறிந்ததில்லை.

---

# மங்களம்

ஸ்ரீருக்மிணீ நாயகா, ஸ்ரீகிருஷ்ண,
ஜயமங்களம். (ஸ்ரீ)

காருண்ய பரமமித்ரா, கல்யாணசுப சரித்ரா! (ஸ்ரீ)

ஆனந்தநிலய ரூபா, அபரிமிதப்ர தாபா,
காவேரி தடநிவாசா, கஸ்தூரி ரங்கராஜா! (ஸ்ரீ)

லங்கேசன் பணியும் பாதா,
ரங்கநா யகிச மேதா! (ஸ்ரீ)

3. புளியோதரை தத்தி யோன்னம்
சர்க்கரைப்பொங் கலும்நல்ல
மளியோதரை சுண்ட லுமாய்
மாதவா, உனக்குத் தருவேன்.
பிள்ளையோக ராம தாஸன்
பிள்ளைக்கு வைத்தபல காரம்,
பலகாரம் வாங்கித் தருவேன்
பலம்தர வே ணும் ஸ்வாமி. (மண்ணை)

---

## மாயவன்

அதோ வாருன் மாயவன்;
இதோ வாருன் மாயவன்;
ஐயன் வீட்டுப் பந்தலிலே
குந்தி வாருன் மாயவன்.

## ரங்கநகர் வாஸன்

1. ஸ்ரீரங்க மாநகர் வாஸன்—தேவர் பூசன், மூன்று
தேவிமார் மீதில்விசு வாசன்.
செங்கோல்குல சிங்கன்,வெகு அங்கன்,மிகு
துங்கன் ரவி
சேய்கள்ஆ ராதிக்கும் ஈசன்;—அந்தச்
செல்வர்கள் மேல்வெகு பாசன்.

2. நிதியில் மிகுந்தகு பேரன்—அதி –காரன்—மிக
நேசித்த யாவர்க்கும் மாரன்;
மதிவாவியும் தருஜோதியும் நதிசூழ்தல பதியாகியும்
நாடிய ராஜனைப் பாராய்;—அவன்
நற்கமலப் பதம் சேராய்.

### ரங்கம்

பாம்பு ரங்கம், பள்ளிரங்கம்,
தேனூர் ரங்கம், சடார் ரங்கம்.

# ரங்கராஜன்

மங்கள கரஉத் துங்கவி மானஸ்ரீ
ரங்கரா ஜனே, ராஜா, —ஸ்ரீ
ரங்கரா ஜனே, ராஜா—து
ரங்கரா ஜனே, ராஜா—மிக
அங்கரா ஜனே, ராஜா,—நர
சிங்கரா ஜனே, ராஜா. (மங்கள)

பங்கமில் லாமலே செங்கோல் செலுத்தும்ஸ்ரீ (மங்கள)

ரங்க ராஜனே, ராஜா
தீனர க்ஷகமூர்த்தி,—அதி
திவ்யசுந் தரமூர்த்தி,
வே ணுகோ பாலமூர்த்தி,—செங்கண்
ஆனவிஷ் ணு மூர்த்தி.
ஆனந்த தேவனே, அரிவையர் நேசனே,
அடிபணிய வரும் கீர்த்தி. (மங்கள)

# ராமர் தாலாட்டு

1. ஆராரோ, ஆராரோ, அகிலபரி பாலனரோ?
சீராய் அயோத்திநகர் ஸ்ரீராம சந்திரரோ?

2. தசரதர்க்குப் புத்திரராய்த்தேவி கௌஸலையிடத்தில்
வசையறவே உதித்த ஒளிசேர் மணிவிளக்கோ?

3. கோசிகர் பின்சென்று கொலைசெய்து தாடகையை
ஆசிபெற்றங் கேசிறந்த* அபிராம சந்திரரோ?

4. ஜனகருடை வில்முறிச்சு ஜானகியைக் கைப்புடிச்சுத்
தினகரகு லம்விளங்கத் திகழ்ராம சந்திரரோ?

5. குடைமகுடம் சூட்டத்தந்தை குவலயம் அலங்கரிக்க
ஜடைமுடியைத் தாங்கிவனம் சென்றரகு நந்தனரோ?

6. கண்டு குகன்வணங்கிப் பண்டு பலம்அளிக்கக்
கொண்டுநதி தாண்டிவந்த கோதண்ட ராகவரோ?†

7. சித்ரகூ டமதனில் சென்றமூம் பரதனுடைப்
பக்திகண்டு பாதுகையைப் பரிவுடன் அளித்தவரோ?

8. ஆரண்ய வாசர் அனைவரங்கே போற்றிநிற்கப்
பூரண மாய்அபயம் புரிந்தவரும் நீர்தாமோ?

9. சூர்ப்பனகை மூக்கறுத்த சோகமதைக் கேட்டகரன்
ஆர்ப்பரிக்க அவர்கள் தலை அறுத்துவிழச்
செய்தவரோ?

10. மாயமான் அங்குவர மயங்கியவர் போல்தொடர்ந்து
சாயம்வெனிப் படஉதைத்த சரணியரே, கண்வளரீர்;

11. விழுங்கமு கரசருடைய விவரமெல்லாம்
கேட்டவர்க்குப்
பழுதறமுக் தியைஅளித்த பரமக்ரு பாலயனோ?

---

(பா-ம்.)* அங்குநின்ற. †கோமானும் நீர்தானோ?

12. கபந்த னிடம்சிக்கிக் கலங்கி இருகரம்தோள்
சுபந்தழைக்க வேஅறுத்த சுந்தரரும் நீர்தாமோ?

13. அன்று சபரியுரித்துத் தின்றுருசி கண்டபழம்
நன்றெனவே நீர்புசித்து நல்லுலகம் சேர்த்தவரோ?

14. சுக்ரீவ சக்யம் சுகமுறவே செய்துதுஷ்டத்
தெசுக் ரிவன் லங்கைவளம் தெரிந்த தயாகரனே?*

15. காலதனுல் துந்துபியைக் கிளப்பிஎழு மரந்துளேச்சு
வாலியையோர் அம்பதனுல் வதைத்தவரும் நீர்தாமோ?

16. கணையாழி கைக்கொடுத்துக் கருணையுடன்
சேதிசொல்லித்

17. தேடிக்கண்டு சீதைகையில் திருவாழி கொடுத்துஅவள்
சூடாமணி தந்திடச்† சுகத்தில் அமர்ந்தவரோ?

18. ராமா சரணமுன்னு ராவணன் தம்பிவர‡
பிரேமையுட னேஅபயம் பிரதானம் செய்தவரோ?

19. வானரங்கள் மலையால் வலியஅணை கட்டியபின்
சேனையுட னேஇலங்கை சேர்ந்தவரும் நீர்தாமோ?

20. அன்றதிகா யன்தனையும் அயரும்கும்ப கர்ணனையும்
கொன்றுஜயம் பெற்றஎன்றன் கோமானே,
கண்வளரீர்.

21. கொடிய அகம்பனையும் கோரஇந்த்ர ஜித்தனையும்
மடியவதை செய்தஎன்றன் மாசூரா§ கண்வளராய்.

22. மூலபலம் மாளவென்று மோகனஸ்தி ரம்தொடுத்துக்
கோல முடன்வதைத்த கோதண்ட ராகவனே!

23. பத்துத் தலையும் பனங்காய்போ லேஉதிர
வெற்றிபெற்று நின்றஎன்றன் விரரகு நந்தனரோ?

---

(பா-ம்.) †பரம குருபரரோ!

(பா-ம்.) †தெரிந்தவனே கண்வளராய்.

§ரகுராமா. ‡வணங்க.

24. அனலில் குளித்தெழுந்த அன்னையெனும் சீதையுடன்
வனம்அகன் றயோத்திதனில் வந்ததொரு
வான்மதியோ?*

25. மேகத்தை நாடுகின்ற சாதகப் பட்சிகள்போல்
தாகமுடன் தாய்மார் தழுவுகின்ற பாலகனோ?†

26. சந்திரனைத் தேடும் சகோர மதுபோல
மந்திரிமார் தேடநின்ற மாதவனே கண்வளரீர்.

27. தண்ணீர்இன் றித்துவளும் தாமரைப்பூப்
போல்பரதன்
கண்ணீர் பெருகிநிற்கக் கட்டிஅணைத் தாண்டவரோ?

28. பரதசத் ருக்னருடன் பாரியாள் சீதையுடன்
வரமகு டந்தரிச்சு வாழும் மணிவிளக்கோ?

29. மாசம்மும் மாரிபொழிய மாநிலம் சிறந்தோங்கக்
கோசல நகரமதைக் குறைவறவே ஆண்டவரோ?

30. தர்மம் தழைக்கத் தவமே சிறந்துவர
கர்மம் வழுவாமல் காத்தஎன் றன் கண்மணியோ?

31. சுத்த ஸவயம்சுடரோ? சோகமெல்லாம் தீர்ந்தறிவோ?

..........

32. ஆதியந்தம் அற்றதுவோ? அகண்டபரி பூரணமோ?
ஜோதிமய மானதுவோ? சுந்தரமா னந்தமதோ?

33. ஆனந்த மானதுவோ? ஆருமறி யாஉருவோ?
மோன முடிவோ? மாயாவ தீதமதோ?

34. ஸ்ரீராம சந்திரரோ? ஜெயரகு நந்தனரோ?
சித்கன னந்தமெனும் ஜீவன்முக்த மாமணியோ?

35. கற்றவரும் கேட்டவரும் காகுஸ்தர் தம்அருளால்
குற்றமற் றிகபரத்தில் கோதற வேசுகிப்பார்.

---

(பா-ம்.) *ரகுராமா.
†வண்மணியோ?

# ராமர் பெருமை

(பல்லவி)

கன்னிமாடம் விட்டுச்சீதா விலக லாச்சுதே. (கன்னி)

(அநுபல்லவி)

1. செங்கமலக் கைத்தலத்தால் என்றன் சேடியே,
சிவதனுசை வளைத்தாரடி, என்றன் பாவையே!
ஸ்ரீராமனடி, தர்ம ரூபனடி, அழகில் மாரனடி. (கன்னி)

2. கோசலைகு மாரனடி, கல்யாண ரூபனடி,
கமல தளமுகசிருங் காரனடி,
காருண்ய ரூபனடி, உன் நாதனடி,
அயோத்யா வாசனடி, நித்யகல் யாணனடி, (கன்னி)

3. மகாமுனிவருடன் மண்டபத்தில் மதிக்கும் தீரனடி
மந்த ஹாஸ வதனம் பொருந்திய
மன்மதன் தம்பிமார் மூன்று பேரடி—இவர்
தலைநாதனடி; தசரத புத்ரனடி. (கன்னி)

# ராஜகோபால ஸ்வாமி ஓடம்

சரணம்ஐயா கணபதியே, ஸ்வாமி,
விநாயகனே முன்நடவாய்.
நான்நினைச்ச காரிய மெல்லாம்—தாயே,
நடத்தித்தர வேணும்அம்மா!
நான்முகன் சரஸ்வதியே, நாவில்வந்து துணையிருந்து
ஸ்ரீராஜ கோபாலர்-அவரோடே-அழகுசொல்ல
முடியாது.
அவரோடே அழகெல்லாம் கவனம்செய்து
ஓடமாகப் பாடுகிறேன் ஏலேலோ!
ஸ்ரீராஜ மன்னருக்குத் தெப்பத் திருநாள்;
சீமைசீமை எங்கும் ஸ்ரீசித்தியாய் இருக்கும்.
ஆனிமாசம் பூர்ண அமாவாசைத் தினத்தில்
ஆருக்மிணி சத்ய பாமையுடன் கூட
ஆனந்த ஜலக்ரீடை ஆடிவந்த குளமாம்.
ஹரித்ரா நதியென்று அதற்குப்பேர் உண்டு.
அந்தக் குளத்தோடே அகலவிஸ் தாரம்
இந்தக் குளத்துக்கு ஈடான துண்டோ?
இருநாழி வழிவேணும், இதுசுத்திப் பார்க்க.
இதில்எழு பத்தஞ்சு படித்துறைகள் உண்டு.
நீராழி யின்ஜலந்தான் குறையவடியாது.
இதுமேல் ஜலம்வந்தால் ஈரானை உயரம்.
நீராழி மண்டபத்து நிகளவிஸ் தாரம்
தூரத்தே பார்வைக்கு நேர்த்தியாய் இருக்கும்.
சுற்றிலும் பூவனங்கள், வாழைத்தோட் டங்கள்;

மத்தியில் கோவில்ஒரு மண்டபம் பெரிதாய.
அந்த ஸ்தலத்தில்நம் வேணுகோ பாலர்,
வந்தஜனங்களுக்கு வரங்களைத் தருவார்.
அதுக்கேத்த வாறழுந்து ராஜகோ பாலர்
அப்பவே தெப்பத்தில் ஏறிவரப் போனர். (ஏலேலோ)

நாலுதேச ஜனங்களெல்லாம்—நல்ல
நாகரிகம் பார்க்க வரும்.
சுத்துக்கி ராமத்தில் உள்ளஜனம்—வெகு
பக்தியுடன் வந்தார் எங்கும்.
ரெயிலேறி ஜனங்க ளெல்லாம்—அந்தச்
சமயத்துக்கே வந்தார் எங்கும்,
தெருவுக்குள்ளே ஜனங்களெல்லாம் எங்கும்,
நெருக்கமாக நெறைஞ்சிருப்பார்.
வெளிச்சமான நிலாவுக்குள்ளே ஜனங்கள்
வேடிக்கையாய் நின்றிருப்பார்.
வரிசையாக விளக்கேத்தி ஜனங்கள் எல்லாம்
வெளிச்சமாக வச்சிருப்பார். (ஏலேலோ)

ஓரொரு பக்கத்தில் அஞ்சுபேர் நிற்கத்
தரமான மத்தாப்பு வெளிச்சங்கள் போடத்
தாசிலு தாரன் கலெக்டருங் கூடத்
தாலூக்கா சேவகன் விலகென்று நிற்க
இந்தவிசை வெகுரொம்ப சந்தடி என்று
இதற்கென்று கருத்தான இன்ஸ்பெக்டர் வந்து
வந்தகான்ஸ் டேபிள் வக்கணைகள் சொல்லி
அந்தஅந்த இடத்திலே ஜாக்கிரதைப் படுத்தித்
தெருவுக்குப் பத்துப்பேர் சேவகரை வைத்துக்
களவுபோ காமலே காத்திருங்க ளென்றும்

காதுமுரி, கழுத்துமுரி, ஜாக்கிரதை என்றும
கவனமாய்ச் சேவகர் கத்திக்கொண் டிருக்கச்
சொரணை இல்லாமலே சிலபேர் ஜனங்கள்
சொகுசாக நகைபூட்டிக் குலுக்கிக்கொண் டிருப்பார்.
ஜடைக்குச்சு ராக்கொடி ஜம்பமாய் வச்சு
அதுமேலே பூச்சூட்டி அழகோடே நிற்க,
அந்தச் சமயத்தில் வந்தான் குறவன்.
அந்தமான நகைதிருடிச் சந்துவழி ஓட
அப்பவே கான்ஸ்டேபிள் தப்பாமல் புடிச்சு
அந்தஇன்ஸ் பெக்டரண்டைக் கொண்டுபோய் நிறுத்த
அழகோடே இன்ஸ்பெக்டர் விசாரணைகள் செய்து
அவன்இரு கைகட்டி ஸ்டேஷனுக் கனுப்பச்
சுற்றிலும் இந்தப்படி வேடிக்கை நடக்க
அப்பவே சுவாமியும் தெப்பத்தில் ஏற
டப்பென்று அதிர்வெடிச் சத்தங்கள் கேட்க,
அப்பவே கூட்டங்கள் எழுந்திருந்து நிற்க,
படுத்திருந்த ஜனங்களெல்லாம் உந்திஎழுந் திருக்க
உறங்கின ஜனங்களெல்லாம் உதறிஎழுந் திருக்க
ஓடிவந்த ஜனங்களெல்லாம் எதிர்நின்று பார்க்க,
அப்பவே ஒருசுற்றுச் சுற்றிக்கொண்டு வரவே,
அழகோடே நீராழி மண்டபத்தில் ஏறி
தளிகைகள் நைவேத்யம் விநியோகம் ஆகத்
தெப்பத்தில் இறங்க எந்நேரம் செல்லும்!
பலஜாதி ஜனங்களும் ஒன்றாக நின்று,
பலபல பாஷையும் பேசிக்கொண் டிருப்பார்.
காத்தாலே யேவந்து காத்துக் கிடந்தேன்,
கண்ணுள்ள சேவையைக் காணுவேன் என்று
காதவழி நடந்துவந்தேன் கால்வலி யோடே.

கண்ணறியப் பார்ப்பமென்று சிலஜனங்கள் சொல்ல,
காசிஅவ தலஉண்டி; ரெயிலுக்கு வஸ்தி.
ராஜகோ பாலனி சூடவல என்னத்
தேசதே சதரும்பு பந்தத நோடே.
ராஜகோ பாலன தெப்பநோ டக்கே
ஆலரே தேவுனி ஜாலதூ பாரே.
அரஹரா என்றுசொல்லி அதில்ஒருத்தர் பேச,
பலஜாதி ஜனங்களும் ஒன்ருக நின்று
நாகரிக மான தெப்பத்தைப் பார்க்க,
நாகசுரம் மத்தாப்புத் தீவட்டிக ளோடே
நகர்ந்து வருகிறது, சுவாமியுடைத் தெப்பம்.
நடக்கவடம் புடிக்கத்தெப்பம் மிதக்கஜனம் பார்க்கப்
பார்க்கப் பார்க்க ராஜகோ பாலரைப்
பதிஞயிரம் கண்கள் சேவிக்கச் சேவிக்க (ஏலேலோ)

சிங்கார மாயந்தத் தெப்பத்திலே—ருக்மிணி
சத்திய பாமா சேர்ந்து நிற்க
அலங்காரமாய் மூவருக்கும் வஜ்ர
ஆபரணம் பூட்டியிருப்பார்.
அங்கத்துடன் பெண்கள்ரெண்டும் மெல்லச்
சாமரங்கள் வீசுகிருர்.
அந்தத் தெப்பம் வெகுவிஸ் தாரம்;—அதிலே
ஆயிரம்பேர் அடங்கி இருப்பார்.
தெப்பத்திலே ஜனங்கள் எல்லாம்—எங்கும்
நெருக்கமாக நிறைந்திருப்பார். (ஏலேலோ)

அழகுடைய தெப்பம்கரை யோரம் வரவே
விதவித மத்தாப்பு வெளிச்சங்கள் போடத்
தாசி லுதாரன் கலெக்டரும் கூட
முனிசிப் தாரனும் தெப்பத்தில் ஏற
இவர்களும் சேர்ந்தொரு பெரியமனு ஷாளே
இப்படியே வாருமென்று கைகொடுத் தழைக்கத்
தெப்பத்தில் எல்லோரும் சந்தோஷ மாகச்
சட்டமாய் மூவரும் உட்கார்ந் திருக்கக்
கொட்டுமேளக்காரன் ஓடங்கள் ஊத
நெட்டிபோல் மிதந்துவரும் கிருஷ்ணருட தெப்பம்.
அடிக்கடி கற்பூர ஆரத்திகள் எடுத்து
அப்பவே ஸ்வாமியும் தெப்பம்விட் டிறங்கி
ஆயிரம் விதமான தாளவாத் தியங்கள்
கோடியில் விட்டதொரு கொக்குவா ணங்கள்
கொடிமல்லி கைப்பூவு, செண்பகப் பூவு,
கூடை கூடை யாஅப்போ கொண்டுவந் திறக்கிக்
கோபால கிருஷ்ணரும் கோயி லுக்குத் திரும்பக்
கோழி கூப்பிட றதுபாரு; பலபலென்று விடிய
ஆறுமணி அடிக்கவே அருணோதயத்தில்
சூரியமண் டலம்கிளம்பக் கிழக்குப் பக்கத்தில்
நம்பளை ரட்சிக்க ராஜகோ பாலர்
நரசிம்ம ரோடேதெய்வம் ஆடிவர அழகோ,!
ஏலேலோ ராஜகோ பாலாகோ விந்தா,
ஏலேலோ வே ணுகோ பாலா!

———

# வரதர் உத்ஸவம்

[காஞ்சீபுரத்தில் வரதராஜப் பெருமாளின் மகோத்ஸவம் வைகாசி மாதம் நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் காலை மாலை பெருமாள் எழுந்தருளும் வாகனங்களை விடாயாற்றி வரையில் சொல்லும் இந்தப் பாட்டு, காஞ்சீபுரத்தைச் சார்ந்த இடங்களிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் வீடுகளில் வழங்குகிறது.]

1. குட்டைகுளத்தில் பாசி
   கோவிலில் ஆடுகிறவள் தாசி
   வடக்கே போனால் காசி
   வரதர் உத்ஸவம்வை காசி.

2. பனமரத்தில் கள்ளு
   பசங்கள் வாயிலே சொள்ளு
   கொல்லை விளைந்தால் எள்ளு
   ஆழ்வார் பொறுக்கும் முள்ளு.*

3. சாதம் கொதிக்கிறது வடியும்;
   கையிலே காரியம் படியும்;
   நெனைச்ச காரியம் முடியும்
   வரதர்க் கேறும் கொடியும்.

---

*ஆழ்வார் எழுந்தருளி மார்க்கங்களைச் சரிபார்த்து வருவது ஓர் ஐதிஹ்யம்.

4. வாசலில் விற்குமாம் மாம்பழம்;
வருந்தி அழைத்தால் இப்புறம்;
வரமாட்டேனென்றால் அப்புறம்;
வரதர் ஏறும் சப்பரம்.

5. உடைமை பண்ணற தங்கம்;—வரதர்
உலகம் பதினுலெங்கும்;
தெற்கே போனுல்ஸ்ரீ ரங்கம்
வரதர் ஏறும் சிங்கம்.

6. செய்கிற காரியம் நிமிஷம்:
செய்யாமல் போனுல் தாமஸம்;
கும்பல் கூடினுல் துமிசம்;
வரதர் ஏறும் அம்சம்.

7. செய்கிற காரியம் அறிவேன்;
சூட்சு மங்களைத் தெரியேன்;
உற்ருர் உடைமையைப் பறியேன்;
வரதர் ஏறும் சூரியன்.

8. கண்தெரி யாதவன் குருடன்;
கட்டி அடிக்கிறவன் திருடன்;
கல்யாணம் பண்ணுத முரடன்; (நம்ப)
வரதர் ஏறும் கருடன்.

9. தெற்குத் தென்னண்டை மடையும்;
முடையும் திருப்புக் கூடையும்;
ராஜாப் பேட்டைக் கடையும்,
வரதர்க்குப் போடும் குடையும்.

10. காட்டில் மேய்கிறது கலைமான்;
கரண்டி பண்றவன் கருமான்;
உடப்பிறந்தான்புள்ளை மருமான்;—(நம்ப)
வரதர் ஏறும் அனுமான்.

11. வெய்யில் வேளையில் வேகும்;
விடாய்த்து வந்தால் தாகம்;
விட்ட பாம்பு சாகும்—(நம்ப)
வரதர் ஏறும் நாகம்.

12. வாத்தியார் சொல்றது மந்திரம்;
வாய்தப்பிப் போனல் தந்திரம்;
தேவ லோகத்து இந்திரன்;—(நம்ப)
வரதர் ஏறும் சந்திரன்.

13. சர்வ மானியக் கழனி;
சண்டைக்கு வந்தான் சகுனி;
அறிஞ்சு வந்தவன் பகுனி;
அஞ்சாந் திருநாள் மோகினி.

14. காக்கை பதுங்கறது வில்லுக்கு;
கழனி உழுதல் நெல்லுக்கு;
திருவிளக் கேற்றினல் உள்ளுக்கு;
மோகினி வேஷம் பல்லக்கு.

15. முத்துக் கட்டின வாளி,
மூக்குக் கிரகண மூளி;
வாசலில் வச்சாள் தாளி;
வரதர் ஏறும் யாளி.

16. வாசலில் விற்குமாம் மோதிரம்;
வருந்தி அழைத்தால் இப்புறம்;
வரமாட்டேன் என்ருல் அப்புறம்;
அஞ்சாம் திருநாள் சப்பரம்.

17. குசவன் பண்ணற பானே;
கூத்தாடி வருமாம் சேனே;
அறிஞ்சு வருமாம் பூனே;
ஆரும் திருநாள் யானே.

18. கொடி வழியில் பூமரம்;
கோணு மாணு போமரம்;
பசங்கள் ஆடறது பம்பரம்;
வரதர்க்குப் போடும் சப்பரம்.

19. துரைகளுடைய காய்ச்சல்;
தள்ளி விட்டான் தாசில்;
ஏகாம்பரேசர் வாசல்;
ஏழாந் திருநாள் ஏசல்.

20. கழனி உழுகிற காரு;
கணக்கு எழுதற ஊரு;
வெள்ளம் வரதுபாலாறு;
வீதியில் வந்தது தேரு.

21. காதில் இட்டாள் ஓலே;
கழுத்தில் முத்து மாலே;
வாரிச் சொருகிளுள் தலேயில்;
வந்ததேதேர் நிலேயில்,

22. கொட்டம் அடிச்சாடு குதிரை;
கொம்பு சளேச்சான் சண்டையில்;
தெற்கே போனுல் மதுரை;
வரதர் ஏறும் குதிரை.

23. பக்கரை போட்டாள் பல்லுக்கு;
பார்த்துப் பயந்தாள் சொல்லுக்கு;
யுத்தம் தொடுத்தாள் மல்லுக்கு;
ஒன்பதாம் திருநாள் பல்லக்கு.

24. வாடப் பூவைக் காட்டி
வருந்தி அழைச்சுச் சூட்டி
ஓர்த்தாமா ரெல்லாம் பூட்டி
ஒன்பதாம் புண்ணியக் கோடி.

25. கோட்டைக் கலங்காரம் கொத்தளம்;
கூத்துக் கலங்காரம் மத்தளம்;
தயிர்பானே உடைந்தால் தத்தளம்;
பத்தாம் திருநாள் சத்தா பரணம்.

26. வெத்தலைத் தோட்டத்து ஆத்தி,
தளிகை பண்ணினுல் நேர்த்தி;
புஷ்ப மாலையைச் சாத்திப்
பெருமாள் விடா யாத்தி.

———

## வருக !

(திருவரங்கனை அழைத்தல்)

சலங்கை ஓசை மணிகள்
கிண்கிணிகளும் அசைவோனே,
அமர்ந்தநடை யுடன்நிமிர்ந்து
கெருடன்மேல் வருவோனே,
மண்டலம்புகழும் ரங்க ராஜனென்று பேர்பெற்றோ
னே,—காதில்
குண்டலம் அசைந்திடக் கருடன்மேல் வருவோனே,
பாவத்தைப் போக்கியே பக்தரைக் காத்திட
நினைத்தோனே,
தருமத்தைக் காத்திடத் தான்கருடன் ஏறி வருவாயே.

## தேரோட்டம்

பத்துக்குச் சித்திரைக் கோலாட்டம்
பங்குனி மாசம் ஆட்டம்
வீரபத்திர சாமிக்கு
வெள்ளியிலே தேரோட்டம்.

# வில் வளைத்த இராமன்

(பல்லவி)

முகுந்தர்வில் வளைத்தாரடி—ஜானகியே, (மு)

(சரணங்கள்)

1. முகுந்தர் வளைத்தாரடி, பூதண்டம் அதிர
நீசெய்த சுகிர்தண்டி ஜானகியே! (மு)

2. மாடிமேல் சென்று மோடியாய்ப் பார்க்கக்
கேலித் தனம்அறிந்தோம், சகிகளெல்லாம். (மு)

3. மல்லிகைக் கூடாரம் மன்னர்கள் சூழ
ஜோர்ஸதளவி லேவருவாய், மோடிசெய் யாமல். (மு)

4. சாமள காத்ரன், கோமள சரீரன்,
கோதண்ட ஹஸ்தனடி—ஜானகியே! (மு)

# பூசாரி பாட்டு

[பொங்கல் அல்லது முக்கியமான சுபகாரியம் நடக்கும் காலங்களில் பெண்கள் கரும்பு முதலான வற்றைப் படைத்துப் பிள்ளையாரைக் குறித்துத் தங்களுக்கு விவாகம் கூடும்படியாகப் பாடிக் கும்மியடித்து, முந்திப் பொம்மைக்குக் கல்யா ணம் செய்யத் தொடங்கி, பிள்ளைவீட்டார் குடைக் கல்யாணம் செய்வதற்காகப் பூசாரிகளை வரவழைக்க, அவர்கள் உடுக்கை அடித்து வர்ணித்துப் பாடி ஊர்வலம் வருவார்கள்.]

எம் மருதமலை வீரப்பா ஆஆஆ
  மணமுடிக்க வேணுமடா ஆஆஆ
பிம்பிம்பிம், பிம்பிம்பிம், பிம்பிம்பிம்!
  உனக்கு ஆடு கோழி தாரேன்;
  ஓசந்த சாம்பிராணி தாரேன்.
நீ, பாடுபட்டுப் பொங்கித் தின்னப்
  பாப்பாத்தி கல்யாணம்;
அது, நன்றாக வேமுடிந்தால்
  நல்ல வேட்டி ரெண்டு தாரேன்.
நீ, சத்துருவை மூக்காலே
  வாயாலே ரத்தம் கொட்ட
ஐயா, ஊரை விட்டுத் தான் ஓட்டி
  உதவி செய்ய வாராயோ?

# ஹரிஹர புத்திரர் தாலாட்டு

(விருத்தம்)

1. பிறந்தபின் குழந்தை தன்னைப் பெற்றதாய் தந்தை
போலச்
சிறந்தநல் மடியில் வைத்து ஸ்ரீஹரி தயவி னாலே
கறந்தநற் பாலும் போட்டிக் கானகத் தடியில் விட்டு
மறந்தவர் இருவ ரும்மாய் மாயமாய் நடந்திட் டாரே.

2. நடந்தபின் குழந்தை தன்னை நாடியே தேவ ரெல்லாம்
படர்ந்தவர் தழைக்க உள்ளம் பக்தியால் குழையும்
வண்ணம்
தொடர்ந்தவர் வேட்டை ஆடக் கருதியே வந்து
கண்டு
மடந்தையர் கையில் ஈந்து மகரிஷி அநுக்ர கித்தார்.

3. அஞ்சாமல் வனத்தை ஆளும் ஜயவீ ரமணி கண்டன்
மிஞ்சவே பேர்கொ டுத்து ரிஷிவெளி ஙிற்க வைத்தார்.

4. வேட்டையில் ஆட லின்கண் விருப்பமாய்ப்
பாண்ட்ய ராஜன்
நாட்டமாய்க் காடு தன்னில் நால்வகை ம்ருகங்க
ளோடே
தேட்டமாய்ச் சேனை யெல்லாம் சிறப்பாகக் கூட்டிக்
கொண்டு
கூட்டமாய் பாண்ட்ய ராஜன் தண்டிகையில்
புறப்பட் டாரே.

வேறு பாட்டு)

மான்கலேகள் பன்றிமுயல் வகைவகையாய்
வேட்டையாடி வந்தார்—ராஜர்
கானகத்தில் குழந்தைதனைக் கண்டு கண்கள்
குளிர்ந்துமனம் மகிழ்ந்தார்.
கனகமய மாயிருக்கும் கரங்களினுல்
பாலகரை எடுத்தார்;
மனந்தனிலே அணைந்துகொண்டு மாலேகளும்
மல்லிகைப்பூத் தொடுத்தார்;
தண்டிகைமேல் ஏறிக்கொண்டு தயவுடனே
ஊர்தனக்கு நடக்க—அங்கே
வந்திருந்த மாதரெல்லாம் வகைவகையாய்
ஊர்தனக்கு நடக்க,
பாரிற்பல்லாக் கேறிக்கொண்டு பட்டணத்தில்
எங்கும்சுற்றி வந்தார்;—அந்த
ஊரிலுள்ள மாதரெல்லாம் ஓடிவந்து
களிசேவை தந்தார்.
மாதரெல்லாம் ஆலத்திகள் மங்களமாய்
மனமகிழ்ந்தே எடுத்தார்;—ஸ்வாமி
ஆதரவாய் அவர்களுக்கு அன்புடனே
கேட்டவரம் கொடுத்தார்.
பொற்பாளே யந்தன்னில் பாண்ட்யராஜன்
தேவி பாலரை எடுத்தாள்;
அற்புதமாய் ஸ்வாமிநல்ல அறிவில் நல்ல
ஞானங்களேக் கற்ருர்.

சந்தனமும் குங்குமும் தாழையொடு
மல்லிகைப்பூ நிறைச்சார்;—அங்கே
வந்திருந்த மாதர்கட்கு
மனமகிழ்ந்து கொடுப்பமென்று நினைத்தாள்.
பொன்னுஅறை பொரிகுமிச்சுப்
புகழுடனே பூமிதானம் அளித்தார்;—அந்த
அன்னையாரும் பால்சுரந்து
அன்புடனே முலைகொடுத்துக் களித்தார்.
தங்கத்தினுல் தொட்டில் பண்ணச்
சதிருடனே நவரத்னங்கள் அமைத்தார்;—அந்த
மங்கையவள் பட்சணத்தை வகைவகையாய்ச்
சாத்தினுளே சமைத்தாள்.
கடலையொடு சிறுபயறு
கனத்தபெருங் கொப்பரையில் சமைத்தாள்;
அடைவுடனே பட்சணத்தை
அனைவருக்கும் கொடுப்பமென்று நினைச்சாள்.
சந்தனமும் குங்குமமும்
அனைவருக்கும் கொடுப்பமென்று நினைச்சாள்—
அங்கே
வந்திருந்த மாதர்கள் அனைவருக்கும்
கொடுப்பமென்று நினைச்சாள்.
அஞ்சாமல் இடைஅடைக்காய்
அனைவருக்கும் கொடுப்பமென்று நினைச்சாள்;
வந்திருந்த மங்கையர்க்கு
மனமகிழ்ந்து கொடுப்பமென்று நினைச்சாள்.

தொட்டிலிலே ஐயர்தமைச்
சுகமாக வளரவிட்டுப் பார்த்தாள்;
தட்டனைய மாத ரெல்லாம்
தாலாட்டுப் பாட லுமே அதனிலே சேர்த்தாள்.

## தாலாட்டு

ஐயர்ஐயர் என்று அவதரிச்ச காலமெல்லாம்
வையகம் புகழுவே வளர்ந்தார் சிலகாலம்;
பையவந்த சேவகனர் பாண்டியனர் வாசலிலே
கையெடுக்கச் சேவகமும் ஐயமிட்டாராம்.
எண்ணிய செல்வமும் எனக்கேத்த பாண்டியர்க்குப்
புள்ளைவிடாய் திர்க்கவந்த பொன்னு மணிவிளக்கோ?
மஞ்சன்விடாய் திர்க்கவந்த வண்ண மணிவிளக்கோ?
......
வாளுக்கு ஆயிரம்பொன் வருஷம்பதி ஞயிரம்பொன்
தோளுக்கு ஆயிரம்பொன் துரைக்குமுத்து ஆயிரமாம்;
எத்தனையோ காலம் தவசிருந்தேன்; என்னடிநான்
புத்திவழி மாத்திவச்ச பொன்னு மணிவிளக்கோ?
உண்ண ஒருவீடாம்; உறங்கஒரு மாளிகையாம்;
தன்னந்தனி அரண்மனையும் தயவுடனே கட்டிவச்சார்;
தாழையும் முள்ளும் தழைச்சிருந்த வாசலிலே
தென்னையும் மாவும் தினந்தோறும் வச்சாரோ?
கள்ளியும் முள்ளும் கலந்திருந்த வாசலிலே
வாழையும் பைங்கமுகும் வைக்கப் பிறந்தானே?

பொற்ருெட்டில் இட்டு வளர்ப்பாளே மானிடத்தாய்;
பூங்தொட்டி லிட்டு வளர்த்தாளே புண்ணியரை.
மரத்தொட்டில் இட்டு வளர்ப்பாளே மானிடத்தாய்;
மார்த்தொட்டி லிட்டு வளர்த்தாளே மன்னவரை;
சிரவண உபநயனம் தான்கழிஞ்ச பிற்பாடு
பட்டயம் பொற்கத்தி வரிசை புலித்தோலாம்.
.........

———

# நாகூர் ஆண்டவர்

நாகூரு ஆண்டவரே,
நல்லசுகம் தந்தவரே,
பச்சைப்புள்ளை பாடப்போறேன்;
பக்கத்துணை நிற்க வேணும்;
ஆலம்நல்ல விழுதுபோல
அந்தப்புள்ளை தலைமயிரு;
தஞ்சாவூரு ராசாவுக்கு
வெண்சாமரம் போடுமின்னு;
பொண்ணைத்தான் பாருங்கோ;
பொண்ணோ திருவழகு.
ஆத்திலே நடந்தால்
அடிதெரியும் என்றுசொல்லிச்
சேத்திலே நடக்கிறுங்க,
செங்கமலம் சேருட.

## ஏசுநாதர் ரதம்

ஒருரதம் ஒரு வெள்ளி ரதம்,
தேவ மாதா ஏறும் ரதம்,
மாணிக்கமணி ரத்தினமாம்,
மின்னுது பார்ஒரு வெள்ளி ரதம்,
குழந்தை ஏசுநாதர் பாதத்திலே.

[இந்தப் பாட்டில் 'தேவமாதா' என்பதற்குப் பதிலாக மாணிக்க மாதா என்றும் சொல்வார்கள். இந்தப் பாட்டுக் கிறிஸ்தவர்கள் வழங்குவது.]

# வருணனுக்கு

[வருணன் தன் பெண்டு பிள்ளைகளை விட்டு விட்டுத் தேவடியாள் வீட்டுக்குப் போய்விடுவதால் மழை பெய்வதில்லையாம். அதனால் பிராமணப் பெண்கள் ஒரு காரியம் செய்வார்கள். களி மண்ணால் பெண்ணுருவமும் ஆணுருவமும் செய்து, சுண்டைக்காயால் கண்கள் வைத்து, பச்சை அரிசியால் பற்கள் வைத்து, சந்தனப் பொட்டு, குங்குமப் பொட்டு வைத்து, வேப்பிலையைத் தலையில் வைத்துப் பூமாலை போடுவார்கள். தென்ன ஓலை, பனை ஓலை, உயர்ந்த வைக்கோல் முதலியவற்றைக் கொண்டு திமூட்டி, அதில் அந்த இரண்டு உருவங்களையும் போட்டுப் பாட்டுப்பாடி அழுவார்கள். இந்த அழுகை வருணபகவான் காதில் பட்டுத் தேவடியாள் வீட்டிலிருந்து திரும்புவானும். அதனால் மழைபெய்து ஏரி நிரம்புமாம்.]

அன்னரே, பின்னரே, ஆத்திப்பூச் சூட்டாரே,
மானத்து ராஜாவே, மழைகொண்டு வாராயோ?
தண்ணிக் குடங்கொண்டு சரிஞ்சுவிழும் மானமே,
இடிஞ்சுவிழும் மானமே!

# பிராது

[இது நதி ஸ்துதியின் பீடிகை என்று ஒரு பாட்டி சொன்னுள்.]

ஸ்ரீமத் அகண்டித ராஜபூஜித மகாராஜ ராஜஸ்ரீ தர்ம துரை அவர்கள் சமூகத்துக்குக் காயாபுரிச் சீமை ஸ்ரீமண்டலம் தாலூக்கா ஸுபாவைச் சேர்ந்த மண்டல மாகாணத்தில் இருக்கும் கருவூர்த் தர்ம துரையவர்கள் பரம தர்ம மதம், ஒரே வயசுள்ளவனுகிய நான் எழுதிக் கொடுத்த வாக்குமூலம் பிரியாது என்னவென்ருல்: —

ஸ்வயம்ப்ரகாசக் கணவாய் ஓரத்தில் இருக்கும் என் நிலம் காணியும் தன்னிலம் காணியும் என் அஞ்ஞானத் தாழ்வால் தரிசாய்க் கிடந்துவிட்டன. என்புத்தி விவேகத் திஞல் முக்கியமாய் முயற்சி செய்யத் தொடங்கியதில், மேற்படி ஊரில் இருக்கும் (1) காமிநாயக்கன், (2) இதயப்பட்டு இச்சைப்பிள்ளை, (3) மூக்கனூர் முனியாம்பிள்ளை, (4) தண்டராயப்பட்டிக் கோவாக்கராயன் பிள்ளை, (5) செவியத்தூர்ச் சிவராயர், (6 பஞ்சகத்தூர்க் கபடநம்பி, (7) கவலைப்பட்டுச் சந்தேகம், (8) கண்ணனூர்ப் பார்வைமுதலி, இவர்களும் முக்குணர்களும் சேர்ந்து, புத்தி என்னும் கலப்பையைப் பிளந்து மனக் கொழுவு பொருத்தி, விவேகம் என்கிற ஏரை ஓடவிடாது தடுக்கிருர்கள்.

இதுக்கு யார் யார் சாதகம் என்ருல், (1) திருவாரூர் மூர்த்திக் கவுண்டன், (2) திருவானைக் காவல் ஜம்பு லிங்கம், (3) திருவண்ணுமலை அக்கினிராவ், (4) திருக் காளஹஸ்திக் காந்த ராயர், (5) சிவசிதம்பரம் அம்பல வாணர். இவர்களை வரவழைத்துத் தண்டித்துக் கண்டித்துப் பூர்விகம் அநுபவித்ததுபோல் உத்தரவு சாதகமாக்க வேணும். நமஸ்காரம்.

